உ

கணபதிதுணை.

எட்டுத்தொகையுளொன்றாகிய

# நற்றிணை

பின்னத்தூர்

## அ. நாராயணசாமிஐயர் அவர்கள்

எழுதிய உரையுடன்



சென்னபட்டணம்

சைவவித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

---

ராக்ஷஸ௵ வைகாசிமீ.] [விலை ரூபா ௩.






# இப்புத்தகத்தில் அடங்கியவை.



---

பின்னத்தூர்

# அ. நாராயணசாமி ஐயர்

இலக்ஷ்மிநாராயண அவதானிகள் என்னும் இயற்பெயருடைய நாராயணசாமி ஐயர் அவர்கள் தஞ்சாவூர்ஜில்லா, திருத்துறைப் பூண்டித் தாலூகாவிலுள்ள பின்னத்தூரில், பிராமணகுலத்தில், கௌண்டின்னிய கோத்திரத்தில் துந்துபி வருடம் (கி. பி. 1862) ஆவணிமாதம் 29-ந் தேதி புதவாரம் பிறந்தவர். இவர் தகப்பனார் அப்பாசாமி ஐயர் என்னும் வேங்கடகிருஷ்ண அவதானிகள்; தாயார் சீதாலக்ஷ்மி யம்மாள். தகப்பனார் வைத்திய நூலிற் சிறந்த பயிற்சி உடையவர்; தரும வைத்தியஞ் செய்பவர்; சாந்த குண முள்ளவர்; சாதுக்களை ஆதரிப்பவர். லௌகிக காரியங்களில் அவர் சிறந்து விளங்கவில்லை: தமது குடும்பத்துக்குரிய சொத்துக்களைப் பாதுகாத்து விர்த்திசெய்வதில் சிறிதும் கவலையில்லாதவராக விருந்தார். இளமையிலே வைதவ்ய மடைந்து அவர்வீட்டில் வசித்துக் குடும்ப காரியங்களைப் பார்த்து வந்த அவர் சகோதரிகளாகிய ருக்மணியம்மாளும் சேஷிபம்மாளுமில்லாவிடின் அவர் குடும்பம் பலகஷ்டங்களை அநுபவிக்க நேர்ந்திருக்கும்.

அப்பாசாமி ஐயருக்குக் குழந்தைகள் எழுவர், ஆண் நான்கு, பெண் மூன்று. ஆண்குழந்தைகளுள் நாராயணசாமி ஐயரே மூத்தவர். இவர்களை எல்லாம் அன்புசெய்து வளர்த்து வந்தவர் இவர்கள் அத்தையாகிய சேஷியம்மாள். இதனை நாராயணசாமி ஐயர் பாடிய பழையதுவிடுதூது என்னும் பிரபந்தத்தில்வரும் "ஒத்த வன்பிற் பல்கதைக ளோதியுவந் தேசேஷி—அத்தை யினிதூட்டு மன்னமே" என்னு மடிகள் நன்கு தெரிக்கும்.

நாராயணசாமி ஐயர் இளமையிலே சிறிது சமஸ்கிருதம் கற்றுக்கொண்டதோடு வேதாத்தியயனமும் செய்துவந்தார். இவர் பதின்மூன்று வயதுவரையில் பின்னத்தூரிற் பள்ளிக்கூடம் வைத்திருந்த கிருஷ்ணபுரம் முத்துராம பாரதியாரிடம் தமிழ்க் கற்று வந்தனர். அக்காலத்தில் ஒருநாள் இவர் மன்னார்குடிக்குச் செல்ல நேரிட்டபொழுது அங்கேயுள்ள இங்கிலீசுப் பள்ளிக்கூடத்தில் தமிழ்ப் பண்டிதராயிருந்த நாராயணசாமிப்பிள்ளையவர்கள் கம்ப

ராமாயணத்திற் சில செய்யுட்களுக்குப் பொருள் விரித்துரைத்த தைக் கேட்டு இன்புற்று அவ்விராமாயணத்தைத் தாம் முற்றும் படித்துணரவேண்டுமென்னும் பேரவாக்கொண்டார். இதுதான் இவர் தமிழ்க்கற்கத் தொடங்கியதற்குக்காரணம். கம்பராமாயணத் தில் சுந்தரகாண்டமே முதலில் வாங்கிப்படித்தனர். பாட்டுக் களை நெட்டுருப்பண்ணும் சக்தி இவருக்கு இயல்பாகவே அமைந் திருந்தமையால், இவர் எதைப்படித்தபோதிலும் அதை நெட் டுருப் பண்ணிக்கொண்டே வந்தார்.

இவர் தமிழ்ப்படிக்க வேண்டுமென்னு மவாவினால் எப்போ தும் புத்தகமும் கையுமாயிருப்பது இவர் அத்தையார் சேஷியம் மாளுக்கு மாத்திரம் மனவருத்தம் தருவதாயிற்று. குடும்பகாரி யத்துக் கிடையூறுகுமென்று கொண்டு, இவர் தமிழ்ப்படிப்பதில் காலம்போக்குவதை அவர் அடிக்கடி கடிந்துவந்தார். அதனால் அத்தையார் அறியாமல் இருக்கவேண்டி இவர் வயல் வரம்புகளி லும் கருவேல மரத்தின்கீழு மிருந்து கற்பாராயினர். அன்பிற் சிறந்த சேஷியம்மாள், கல்வியறிவில்லாமையா லன்றோ, தமது மருகன் கல்வியில் காலம்போக்குவது குடும்ப காரியத்துக் கிடை யூறுகுமென்று கருதினர்!

இவர் இவ்வாறு தமிழ்நூல்களைக் கற்றுக் கவிபாடு மாற்றல் பெறந்து விளங்கினாராயினும், பலநூல்களையும் தாமே கற்றுக்கொ ண்டமையால் அவைகளில் சந்தேகங்கள் பல உடையவராயிருந்த ார். இக் குறையை நீக்குவதற்கு எற்ற சமயம் இவருக்குச் சீக் கிரத்தில் கிடைத்தது. யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுகநாவல ன் மருகரும் வித்துவ சிரோமணியுமாகிய பொன்னம்பலபிள்ளை யவர்கள் சிறிதுகாலம் வேதாரணியத்தில் வாசஞ்செய்து கொண் டிருந்தார்கள். அவரை நாராயணசாமி ஐயர் தலைப்பட்டுக் கற்று ரக் கற்றோரே காமுறுவ ரென்றபடி அவரிடத்து நட்புக்கொண்டு அவரால் தன்சந்தேகங்களைத் தீர்த்துக்கொண்டதுமன்றி அவரி ம் பஞ்சகாவியங்களுள் முதலாகிய சிலப்பதிகாரத்தையும் பாடங் கேட்டனர். அதுவுமன்றி நீலகண்டேச்சரக் கோவைபாடி மன் ார்குடியில் அவர் முன்னிலையில் அரங்கேற்றி அவர் விரும்பிய டி சமஸ்கிருதத்திலிருந்து காளிதாசனியற்றிய பிரகசன நாட கத்தையும் மொழிபெயர்த்தார்.

நாராயணசாமி ஐயர் தமிழ்நாட்டின் பழஞ்சரிதங்களை ஆராய்வதில் மிக்கவிருப்பமுள்ளவர்; கோயில்களிலும் அவைபோன்ற மற்றிடங்களிலும் வெட்டியுள்ள பழங்கல்வெட்டுக்களை வாசித்தறியும் திறனுடையவர்; தமிழ்ப் புலவர்களின் பழஞ்சரிதங்களை நன்கு புணர்ந்தவர்; அவர்கள் அவ்வச்சமயங்களிற் பாடிய கவிகளையெல்லாம் மனத்தமைத்து வேண்டும்போது எடுத்துரைக்கும் வன்மைவாய்ந்தவர். இவருக்குத் தொல்காப்பியத்துப் பொருளதிகாரத்தில் சிறந்த பயிற்சியுண்டு. அதில் எடுத்துக்காட்டிய மேற்கோள்களுக்கெல்லாம் இவர் ஓரகராதி எழுதிவைத்துள்ளார். இவரால் இயற்றப்பட்ட தமிழ் நூல்களும் உரைகளும் பல. அவற்றுள் சில அச்சில் வந்துள்ளன; எஞ்சியவை இன்னும் அச்சிடப்படவில்லை, அவை வருமாறு:—பிரகசனநாடகம், இடும்பாவன புராணம், இறையனாராற்றுப்படை, நீலகண்டேச்சரக் கோவை, சிவபுராணம் (ஞானசங்கிதை), சிவகீதை, நரிவிருத்தம், *மாணாக்காற்றுப்படை, * இயன்மொழிவாழ்த்து, * தென்றில்லை(தில்லைவளாகம்)யுலா, * தென்றில்லைக் கலம்பகம், பழையதுவிடுதூது, மருதப்பாட்டு, செருப்புவிடுதூது, தமிழ்நாயகமாலை, *களப்பாழ்ப்புராணம், *இராமாயண அகவல், அரதைக்கோவை, வீரகாவியம். இவற்றுள் பின்னிரண்டும் முற்றுப்பெறவில்லை.

இவர் பிற்காலத்தில் சங்கத்து நூலாகிய எட்டுத் தொகையுள் குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு என்பவைகளை உரையுடன் வெளிப்படுத்தவேண்டுமென்று பெருமுயற்சி செய்து நற்றிணைக்கு உரையெழுதி முடித்து அகநானூற்றுள்ளும் பல பாட்டுக்களுக்கு உரையெழுதி வைத்துள்ளார். குறுந்தொகைக்கு உரையெழுதினதாகக் காணப்படவில்லை; சில பாட்டுக்களை மாத்திரம் திருத்தி எழுதிவைத்திருப்பதாகத் தெரிகிறது. நற்றிணை அச்சிடும்போது இவருக்கிருந்த நீரிழிவு நோய் அதிகப்பட்டது கண்டு தாமிறக்கு முன் நற்றிணைப் புத்தகத்தைக் கண்ணுற் பார்த்துவிட்டு இறக்க வேண்டுமென்று பெருவிருப்புற்றிருந்தனர். அது கிட்டாது போயிற்று. அவர் இறக்கும்போது நற்றிணை உரை முழுதும் அச்சாகிவிட்டது; பாடினோர் வரலாறும் பாடப்பட்டோர் வரலாறுமே அவர் இறந்தபின் அச்சிடப்பட்டன.

* இக்குறியிடபபட்டவை அச்சிடப்பட்டுள்ளன.

நாராயணசாமி ஐயர் 1899-ம்ௗ ஜூலைமீ 28உ தொடு த்து இறக்கும் வரையும் கும்பகோணம் டவுன் ஹைஸ்கூலிலே தலைமைத் தமிழ்ப்பண்டிதராக விருந்தார். இவர் நீரிழிவு நோயால் வருந்தி ஆனந்தௗ ஆடிமீ 15உ வியாழக்கிழமை (1914-ம்ௗ ஜூலைமீ 30உ) தமது சென்ன பூமியாகிய பின்னத்தூரிலே தமது கிருகத்திலே நிலவுலகவாழ்வை நீத்துச் சிவலோக வாழ்வை யடைந்தனர். இவருக்கு ஆண்சந்ததியில்லை; இரண்டு பெண்குழந்தைகளுண்டு.

# முகவுரை.

நற்றிணை நானூறென்னும் இந்நூல் மதுரைமாநகரில் முன்னாளில் நிலையிட்ட தமிழ்ச்சங்கத்திருந்த புலவர் பலராலும் பாடப்பெற்ற எட்டுத் தொகையுள் ஒன்று.

பலபல காலத்திற் பற்பல புலவர்களாற் பாடப்பெற்ற அகவற்பாக்களும் பரிபாடலும் கலிப்பாக்களுமாக அகத்திணை, புறத்திணை இரண்டினையுந் தழுவிச் சுமார் இரண்டாயிரத்தைஞ்ஞூற்றுக்கு மேற்பட்ட பாடல்கள் முன்னிருந்தன.

அவற்றை, அக்காலத்துள்ள அரசர்கள் கட்டளைப்படி, புலவர் பலர் அகத்திணைக்குரிய செய்யுட்களில் நாலடி முதல் எட்டடி வரையிலுள்ள நானூறு அகவற்பாக்களைத் தொகுத்துக் குறுந்தொகை எனவும், ஒன்பதடி முதல் பன்னிரண்டடி வரையிலுள்ள நானூறு அகவற்பாக்களைத் தொகுத்து நற்றிணை எனவும், பதின்மூன்றடி முதல் முப்பத்தேழடி வரையிலுள்ள நானூறு அகவற்பாக்களை தொகுத்து நெடுந்தொகை எனவும் (இதுவே அகநானூறென்பது.), தனித்தனி ஐந்து புலவர்களாற் செய்யப்பெற்ற ஐஞ்ஞூறு அகவற்பாக்களைத் தொகுத்து ஐங்குறுநூறு எனவும், பரிபாடலுறுப்பாற் செய்யப்பெற்ற எழுபது பாடல்களைத் தொகுத்துப் பரிபாடல் எனவும், கலிப்பாவாற் செய்யப்பெற்ற நூற்றைம்பது பாடல்களைத் தொகுத்துக் கலித்தொகை எனவும், புறத்திணைக்குரிய நானூறு அகவற்பாக்களைத் தொகுத்துப் புறநானூறு எனவும், தனித்தனி பத்துப்புலவர்களாற் செய்யப்பெற்ற நூறு அகவற்பாக்களைத் தொகுத்துப் பதிற்றுப்பத்து எனவும் பெயரிட்டுத் தொகை நூல் எட்டாக்கினார்கள்.

அவ்வெட்டுத்தொகையுள் முதலாவதாக * அமையப்பெற்ற இந் நற்றிணையைச் சோதித்து அச்சிடவேண்டுமென்னும் விருப்

---

* நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறுநூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தா ரேத்துங் கலியோ டகம்புறமென்
றித்திறத்த வெட்டுத் தொகை.

புற்றிருக்கையில், என் நண்பரும், மன்னார்குடி மிஷன் ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதர் நாராயணசாமிப்பிள்ளை அவர்களின் குமாரரும் போலீஸில் உத்தியோகம் வகித்திருப்பவருமாகிய ஸ்ரீமத் நா. சோமசுந்தரம்பிள்ளை அவர்கள் யான் பொருளுக்கு முட்டுப்பாடுறாது வேண்டிய அளவு உதவி, ஏடுகள் தருவித்துச் சோதிக்கும்படி செய்தார்கள். அதன்பின் ஸ்ரீ சுவாமி வேதாசலம் அவர்களுடைய முயற்சியைக்கொண்டு சென்னை இராஜாங்கக் கையெழுத்துப் புத்தகசாலையிலுள்ள பிரதியைக் காப்பிசெய்து தருவித்து ஒருவாறு திருத்திவருகையில் மஹாமஹோபாத்தியாயர் பிரும்மஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்கள் இரண்டுபிரதிகள் அனுப்பினார்கள். அவற்றோடு ஒப்புநோக்கியபின் மதுரைத் தமிழ்ச்சங்கஞ்சென்று அங்குள்ள பிரதிகளோடு ஒப்பு நோக்கினேன். பின்பு சென்னையிலிருக்கும் ஸ்ரீமான் தி. த. கனகசுந்தரம்பிள்ளை அவர்கள் தம்மிடத்திலிருந்த பிரதிகள் இரண்டனையுங் கொடுத்துதவினார்கள். அவற்றினையும் பெற்று ஒருவாறு திருத்தி எனது அறிவிற் கெட்டியவாறு ஓர் உரையை எழுதி அச்சிடத் தொடங்கியகாலையில் இதன் பக்கத்திற் கண்ட தமிழபிமானசிலர்களின் பேருதவியால் ஒருவாறு அச்சிட்டு முடித்தனன். எனக்குக் கிடைத்த எல்லாப் பிரதிகளுள்ளும் ௨௯௪-வது பாடலும், ௯௮௫-வது பாடலிற் பிற்பகுதியும் காணப்படவில்லை. அவற்றையுந் தேடிச் சேர்த்த பின்னரே வெளிவிட வேண்டுமென்றிருந்த யான் காலதாமதப்படுவதைக் கருதி அவைகள் கிடைப்பின் மறுபதிப்பிற் சேர்த்துவிடலாமென்னு மெண்ணத்தோடு இதனை வெளியிடலானேன்.

வி. கோபாலசுவாமி இரகுநாதராஜாளியாரவர்கள், (அரித்துவாரமங்கலம்.)
கெ. சுந்தரராம ஐயர் அவர்கள்,
டி. எ. பாலகிருஷ்ண உடையாரவர்கள்,
ருவ்பகதூர் - கே. கிருஷ்ணசாமி ஐயங்கார் அவர்கள், (கும்பகோணம்.)
த. ப. சிதம்பரதேவரவர்கள், (தேவி.)
சி. வயி. அருணாசலம் செட்டியார் அவர்கள், (முத்துப்பேட்டை.)
சிதம்பர சபாபதிப்பிள்ளை அவர்கள், (மண்ணுக்குமுண்டான்.)
ஐ. சின்னச்சாமிப்பிள்ளை அவர்கள், (பாலைக்காடு.) முதலியவர்கள்.

ஆனந்தஹெல் அடிமீ. அ. நாராயணசாமி ஐயன்.

கடவுள் துணை

# பாடினோர் வரலாறு.



## க. அகம்பன்மாலாதனார்.

இவர் ஆதன் என்னும் இயற்பெயருடையவர். அகம்பல் ஓரூர்; மதுரைஜில்லா, பெரியகுளம் தாலூகாவில் அகமலையென்று ஒரூருளது; அகம்பலென்பதே இங்ஙனந்திரிந்து வழங்குகிற தென்றாகிக்கப்படுகின்றது. அகம்பன்மால்-அகம்பலென்னும் ஊர்க்குத் தலைவனென்பதாம். இவர் முல்லைத்திணையை அலங்கரித்துப் பாடியுள்ளார். இவர் பாடலிற் கிளவித்தலைவன் வினைவலபாங்கனாகவைத் தமை ஆராயத்தக்கது. இவர்பாடியது நற்றிணை, செய்யுள், அக.

## உ. அஞ்சி லஞ்சியார்.

இவர் இயற்பெயர் அஞ்சி. அஞ்சிலென்னும் ஊரினராதலின் அஞ்சிலஞ்சியாரெனப்பட்டார். இஃது ஊர்பற்றி வந்த பெயர். இவர் மருதத்திணையைப் பாடியுள்ளார். இவர் பாடியது நற். கூ0.

## ங. அஞ்சி லாந்தையார்.

இவர் முற்கூறிய அஞ்சில் என்னுமூரினுள்ள ஆதன் தந்தையார். தொல். எழுத்து. ஙசஅ - ம் சூத்திர விதிப்படி ஆதன் தந்தை ஆந்தை யெனப்படுவதறிக. இவர் குறிஞ்சி நெய்தல் வளங்களைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் பாடியனவாக நற்றிணையில் உஙங-ஆம் பாட்டொன்றும் குறுந்தொகையிலொன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ச. அம்மள்ளனார்.

மள்ளனாரெனப்பலபேர் உளராதலால் அவர்களினின்றும் வேறுபடுத்த இவர் அம்மள்ளனாரெனப் பட்டார்போலும். இவர்

குறிஞ்சித்திணையைப் பாடியுள்ளார். இவர் பாடலில் முருக வேளும் வள்ளியம்மையும் உவமிக்கப்பட்டுள்ளனர்; தலைமகன் தலைமகளையழைத்தல் மிக்க இனிமையுடையது. இவர்பாடியது நற். அஉ-ம் செய்யுள்.

## ரு. அம்மூவனார்.

மூவன் என்னும் இவர் இயற்பெயர் அடைமொழி புணர்த்தி அம்மூவனாரெனப் பட்டதென்று ஊகிக்கலாம்; ஆயினும் இவர்பாடலில் மேலைக்கடற்கரையின்கணுள்ள தொண்டி மாந்தை முதலாய சேரநாட்டு ஊர்கள் சிறப்பித்துப் பாடியிருப்பதுபற்றி இவர் சேரநாட்டு மேலைக் கடற்கரையிலிருந்தவரென்று கருதற்கிட மிருத்தலாலும் இக்காலத்தும் அந்நாட்டில் அம்மு, திம்மு, திப்பு என்னும் பெயர்கள் மக்களுக்கிடப்பட்டு வழங்கி வருதலாலும் இவரது இயற்பெயர் அம்மூவென்று மிருக்கலாம். இவர் பாடியவற றுள் அகம். நரு-ஆஞ்செய்யுளொன்றுமே பாலைத்திணையாகவும் ஏனையவெல்லாம் நெய்தற்றிணையாகவுங் காணக்கிடத்தலின் இவர் நெய்தனிலவளத்தைச் சிறப்பித்துப் பாடுதலில் வல்லவராவர். இந்நூல் எசு-ஆஞ்செய்யுளைப் பாலைத்திணையிற் பாடத்தொடங்கி யவர் கிளவித் தலைவியை நெய்தனிலத்தினளாக வமைத்ததனால் இவரது ஆற்றல் பெரிதும் விளங்கும். நற்றிணையில் இவர் கூறிய உள்ளுறைகள் படிப்போர் மனத்தைக்கவர்ந்துகொள்ளுந்தன்மைய வாயுள. பாண்டிநாட்டுக் கொற்கைநகரும், நடுநாட்டின் கண்ண தாகிய திருக்கோவலூரும், பெண்ணையாறும், சோழநாட்டுக் கோயில்வெண்ணியும் இவராற் பாடப் பெற்றுள்ளன. தலைமகன் காமவேட்கையால் உப்புவிற்பாளைத்தடுத்துக்கூறல் வியக்கத்தக் கது; அகம். நசுo. தலைமகளைப் பெறவேண்டியதலைமகன் ஆங்கு அடிமைத்தொழில் செய்தேனும் பெறுவேமோ வென்பதும் அத்தன்மையதாகும்; அகம். உஅo. கீழைக்கடற்கரையைச் சிறப் பித்துப்பாடும் உலோச்சனாரும் மேலைக்கடற் கரையைச் சிறப்பித் துப்பாடும் இவருமாகிய இவ்விருவரும் தமிழ் நாட்டிற்கு இருபா லும் விளங்கும் இரண்டு வளரிள ஞாயிறெனவும் இரண்டு கண்க ளெனவும் இரண்டு இரத்தினங்களெனவுங் கூறத்தக்கவராவார். இவரியற்றியனவாக நற்றிணையில் பத்துப் (ச, நரு, எசு, கநஅ, உஎரு, நoஎ, நகரு, நஉஎ, நசுரு, நகூஎ.) பாடல்களும்,

குறுந்தொகையில் பதினொன்றும், ஐங்குறு நூற்றில் நெய்தற் பாட்டு நூறும், அகநானூற்றில் ஆறுமாக ௧௨௭ பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௬. அம்மெய்ய னாகனார்.

நாகன் என்பது இவர் இயற்பெயர்; நாகன் என்னும் பெயருடையார் பலராதலால் அவரின் இவர் வேறு என்பது தெரிய இவர் இயற் பெயருக்கு முதலில் 'அம்மெய்யன்' என்னும் பெயர் புணர்த்தப்பட்டது. அம்மெய்ய னென்பது தந்தையின் பெயர் போலும். முற்காலத்திற் புலவரிற் பெரும்பாலார் தந்தையின் பெயரையும் தம்பெயரோடு சேர்த்துவைத்துக் கொள்ளுதல் மரபு; ஆதித்தன் மகன் கம்பரை "அம்புநாட் டாழ்வா னடிபணியு மாதித்தன், கம்பநாட் டாழ்வான் கவி" என்றாற் போல. மேல் வருவனவற்றுக்கும் இஃதொக்கும். இவர் பாலைத்திணையைப் புனைந்து பாடியுள்ளார். இவர் காதலியை வருணித்திருப்பது வியக்கத்தக்கது. இவர் பாடியது நற். ௨௫௨-ம் செய்யுள்.

## ௭. அல்லங் கீரனார்.

கீரன் என்னும் பெயருடையார் பலராதலால் அவரின் இவர் வேறென்பது தெரிய அல்லங் கீரனாரெனப் பட்டார். இஃது ஊர்பற்றிவந்த பெயர்; அல்லம்—ஓரூர். மலையாளம் ஜில்லாவில் அல்லனமென வோரூருளது. இவர் நெய்தலைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். முகம்புகு கிளவி பாடவல்லவருள் இவருமொருவர். இவர் பாடியது நற். ௨௪௫-ம் செய்யுள்.

## ௮. அறிவுடைநம்பி.

பாண்டியன் அறிவுடைநம்பி யென்பவ ரிவரே. புதல்வரில்லார்க்கு இருமைப் பயனு மில்லையென இவர் புறம். ௧௮௮-ஆம் பாடலில் விளங்கக் கூறியுள்ளார். இவர் பிசிராந்தையாராற் பொருண்மொழிக்காஞ்சி பாடப்பெற்றவர்; புறம். ௧௮௪. தலைவியை அச்சுறுத்தித் தினைப்புனங் காவலோம்புமாறு தோழி கூற்றாக இவர் பாடியது நெறியுடையதாகக் காணப்படும்; அகம். ௨௮. இவர் நெய்தலையுங் குறிஞ்சியையும் புனைந்து பாடியுள்ளார். இவர் பாடியனவாக நற்றிணையில் பதினைந்தாம்பாட,

லொன்றும், குறுந்தொகையி லொன்றும், அகத்தி லொன்றும், புறத்தி லொன்றுமாக நான்கு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௯. ஆலங்குடி வங்கனார்.

இவர் ஆலங்குடியிலுள்ள வங்கனென்னும் இயற்பெயருடையவர். இவர் பாடியவற்றுட் புறத்திணை யொன்றொழிய ஏனைய வெல்லாம் மருதத்திணையின வாதலின் மருதநிலத்துள்ள ஆலங்குடியினரெனக் கருதப்படுகின்றனர். மருதநிலத்தில் ஆலங்குடியென்று பலவூருளவாதலின் இவரூர் இன்னதெனத் துணியக் கூடவில்லை. இவர் பாடியன வெல்லாம் பெரும்பாலும் பரத்தையிற் பிரிவே; ஒவ்வொருசெய்யுளும் இனிமை தாராநிற்கும்; நற்றிணையின் ௩௩௦, ௪௦௦—ஆம் பாடல்களினுள்ளுறையும், அகம். ௧௦௬, பரத்தை கூறுங் கூற்றும் வியக்கத்தக்கன. இவர் பாடியனவாக நற்றிணையில் மூன்று (௨௩௦, ௩௩௦, ௪௦௦) பாடல்களும், குறுந்தொகையில் இரண்டும், அகத்தி லொன்றும், புறத்தொன்றும், திருவள்ளுவமாலையி லொன்றுமாக எட்டுப் பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௧௦. ஆலம்பேரி சாத்தனார்.

இவர் மதுரையைச்சார்ந்த ஆருலவியநாட்டு ஆலம்பேரியென்னு மூரிலுள்ள சாத்த னென்னு மியற் பெயருடையவர்; ஏடெழுதுவோரின் பிழையால் வாலம்பேரி சாத்தனா ரெனவுங் கூறப்படுவர். இவர் பாடலால் இவர் நெய்தனிலத்தும், பாலைநிலத்தும் நன்றாகப் பயின்றவரென்று தெரிகின்றது; நற். ௧௫௨. எல்லாத் துன்பமும் மடல் முதலாயின தந்தன வென்று தலைவனொருந்து கூறுங் கூற்றும், நற். ௨௫௫-ல் ஆறுபார்த்துற்ற வச்சமும், நற். ௩௦௩-ல் வேட்கைதாங்காது தலைமகள் இரவுறு துயரங் கூறுவதும் மிக்க சுவையுடையன வாகும்.

மற்றும் இவர் அகம். அக-ல் கடலனது விளங்கிலென்னு மூரையும், அகம். க௪௩—ல் வானவன் பிட்டன் குதிரைமலையையும், அகம். கஎ௫—ல் நெடுஞ்செழியன்போர் வென்ற திருத்தலையானங் கானத்தையும், நெவியனென்னும் கொடையாளி யொருவனையும் பாராட்டிக்கூறி யிருத்தலானே அவர்கள் காலத்தவரென்று கொள்ளலாகும். இவர் பாடியனவாக நற்றிணையில் நான்கு (க௫௨,

உருரு, ௬.0௬, ௬௬.அ) பாடல்களும், அகத்தில் நான்குமாக எட்டுப் பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## கக. ஆவூர்க் காவிதிகள் சாதேவனார்.

சாதேவன் என்பது ஸஹதேவன் என்னும் வடசொல்லின் திரிபு. காவிதி யென்பது பாண்டிநாட்டு வேளாளரில் உழுவித்துண் போர் அரசராற் பெறுவதொருபட்டம். அகத்தில் இவர்பெயர் ஆவூர்க்கவுதமன் சாதேவன் என்றுகாணப்படுகிறது; புலவர் பெரும் பாலோர் தத்தம் ஊரைச்சிறப்பித்துக் கூறும் வழக்கின்படியே இவர் சேரநாட்டு ஆமூர் என்பதனைச் சிறப்பித்துக் கூறியிருத்த லின் 'ஆமூர்க்கௌதமன் சாதேவனார்' என்றிருக்கவேண்டிய இவர் பெயர் ஏடெழுதுவோரின் மிகையால் ஆவூர்க்காவிதிகள் சாதே வனாரென்றெழுதப்பட்டது போலும். அங்ஙனமாயின் இவர் சேர நாட்டு ஆமூரிலுள்ள கௌதம கோத்திரத்துப் பிறந்த ஸஹதேவ னென்னும் அந்தணராவர். ஆமூர் குறும்பொறையென்னும் மலையின் கீழ்பாலுள்ள பாலைநிலத்தின் கண்ணது. அதற் கேற்ப இவர் பாடல்கள் பாலைத் திணையை வர்ணிப்பனவாகும்; கொண்டு தலைக்கழிந்த தலைமகன் நீ அஞ்சாது கொண்டைமேற் காற்றடிக் கச் செல் என்றது சுவையுடையதாகும்; நற்–உ௬௪. இவர்பாடி யனவாக நற்றிணையில் உ௬௪–ஆம் பாட லொன்றும், அகத்தி லொன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## கஉ. இடைக்காடனார்.

இவர் பெயராலேயே இவர் இடைக்காடு என்னும் மூரின ரென்று தெரிகிறது; இடைக்காடு-மலையாளம் ஜில்லாவிலுள்ளது. இவர் பாடல்களிலெல்லாம் இடையர்களைப் பலபடியாகச் சிறப்பித் திருத்தலின் இவரும் இடையர்தாமென் றூகிக்கப்படுகின்றது. இவர் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடியிருத்தலின் அவன் காலத்தின ராவர்; புறம்–௪உ. முல்லைத்திணையைச் சிறப் பித்துப் பலபடியாகப் புனைந்து பாடியுள்ளார். ஆயர் மழையில் நனைந்தபடியே ஊன்றுகோல்மேற் கால் வைத்து நின்று ஆட்டை விளிப்பது சுவையுடையது; நற்–க௪உ. அங்ஙனம் அழைப்பது கண்டு அங்கு ஆட்டைக் கொண்டுபோகவந்து பதுங்கி யிருந்தநரி

அஞ்சி யோடாநிற்கு மென்றது மனத்தைக் கவருந்தன்மையது; அகம். உளச. வம்பமாரியென்று தோழி தலைவியை ஏமாற்றியது வியக்கத்தக்கது; நற். ௬கரு. இவர் முயற்கண்ணுக்கு நெல்லிக் காயை யுவமித்துளார்; அகம். உஅச. நற்றிணை உஉக–ஆம் பாட்டு ஒரு பிரதியில் இடைக்காடர் பாடியதெனவும் மற்றைப் பிரதிகளிலெல்லாம் இளவேட்டனார் பாடியதெனவு மெழுதியிருந் ததனால் இளவேட்டனார் பாடியதாக அச்சிடப்பட்டது; பின்னர் ஆராயுமிடத்து இளவேட்டனார் பாடியனவெல்லாம் பாலைத்திணைப் பாடலாயிருத்தலான் முல்லையை அவர் பாடிலரெனவும் இடைக் காடனாரே பாடியிருக்கவேண்டுமென்றுங் கருதலாயிற்று. அதனை யுஞ்சேர்க்க இவர் பாடியனவாக நற்றிணையில் மூன்று (கசஉ, உஉக, ௬கரு.) பாடல்களும், குறுந்தொகையி லொன்றும், அகத் தில் ஐந்தும், புறத்திலொன்றும், திருவள்ளுவ மாலையி லொன் றுமாகப் பதினொரு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## க௬. இளங்கீரனார்.

எயினந்தைமகனார் இளங்கீரனாரென்பவ ரிவரே. வினைவயிற் பிரியுந்தலைமகன் இல்லத்தழுங்கலும் இடைச்சுரத் தழுங்கலு மாகிய துறைகளை யமைத்துப் பாலைத்திணையைப் பல படியாகப் புனைந்து பாடியுள்ளார். இவர் பாலைத்திணையையும் அதிலுள்ள வேடரையும் பலவாறாகப் பாராட்டிக் கூறுதலாலும், இவர் பெயர் எயினந்தைமகனாரென் றிருத்தலாலும், இவரை அந்நிலத்துள்ள வேட்டுவர் மரபினரென்று கொள்ளலாம்; எயினர்–வேடர். சிறு வர் மரத்தினிழலிற் பாண்டிலாடுவது கூறுகிறார்; நற். ௬. உதியஞ் சேரல் செய்த போர்ச் சிறப்புக் கூறுகிறார்; நற். கக௬. இதிற் கா தலி நோக்கம் இடைச்சுரத்து வந்து தடுப்பதாகக் கூறுவது நயமு டையது. தலைமகன் பிரிகின்றானைத் தடுத்துக் காதலி மேல்வீழ் ந்து முயங்கிவருந்துவது யாவரும் மயங்குந்தன்மைய தாகும்; நற். ௬0அ. மகளிர் பிறை தொழுதேத்தும் வழக்கு இவராற் கூறப்பட் டுள்ளது; அகம். உ௬௬. காதலன் பிரிந்தவழிக் காதலி சுவரிலே கோடிட்டு நாளெண்ணும் வழக்குக் கூறப்பட்டுள்ளது; அகம். உஅ௬. யாககுண்டத்தின்கீழ் யாமையைவைத்து மூடும் வழக்குக் கூறப்பட்டுள்ளது; அகம். ௬௬க. இவர் பாடியனவாக நற்றிணை யில் ஆறு (௬, ௬உ, கக௬, உ௬௬, ௬0அ, ௬ச௬.) பாடல்

களும் அகத்தில் எட்டுமாகப் பதினொன்கு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## கச. இளந்திரையனார்.

தொண்டைமான் இளந்திரைய னென்பவர் இவரே. இவர் கடியலூர் உருத்திரங் கண்ணனாரென்னும் அந்தணாரற் பாடப்பட்ட பெரும்பாணாற்றுப்படை கொண்டவர். "ஆழி யிழைப்பப் பகல் போ மிரவெல்லாந், தோழி துணையாத் துயர்தீரும்—வாழி, நறு மாலை தாராய் திரையவோ வென்னுஞ், சிறுமாலை சென்றடையும் போது" எனப் பொய்கையாராற் பாராட்டிப்பாடப் பெற்றவரு மிவரே. இவர் நெய்தலைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; காதலி காதலனைக் கடிந்துகூறுவது வியக்கத்தக்கது; நற். கூச. வம்பமாரி யென்று தலைவியை ஏமாற்றுதல் சுவையுடையதாகும்; நற். கூசு. இவர் பாடியனவாக நற்றிணையில் மூன்று (கூச, கூசு, க0சு.) பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## கரு. இளந்தேவனார்.

மதுரைப் பண்டவாணிகன் இளந்தேவனா ரென்பவர் இவரே; பண்டம்-பலசரக்கு. இவர் வணிகர் மரபினர்; பாலையையுங் குறிஞ்சியையும் புனைந்துபாடியுள்ளார்; காதலி விருந்து புறந்தருதலை வியப்புறப் பாடியிருக்கிறார்; நற். சக. தலைவன் இரவுக்குறி வருதலைக்கூறுவது பாராட்டற் பாலது; அகம். உகூஅ. இவர் பாடியன வாக நற்றிணையில் சக—ஆம் பாடலொன்றும், அகத்தில் மூன்று மாக நான்கு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## கசு. இளநாகனார்.

நாகன் என்னும் பெயருடையார் பலரிருத்தலின் அவரின் இவர் வேறென்பது தெரிய இளநாகனா ரெனப்பட்டார். இவர் பாலையையும் நெய்தலையும் புனைந்து பாடியுள்ளார்; தலைவியைக் கருதித் தலைமகன் செலவழுங்கியது நயமிக்கதாகும்; நற். உ0ரு. இவர் பாடியன நற்றிணையில் இரண்டு பாட்டு (உ0ரு, உகூக.)

## கஎ. இளம்புல்லூர்க் காவிதி.

இவரியற்பெய ரெழுதப்படவில்லை; காவிதிப்பட்ட முடைமை யால் பாண்டிநாட்டு உழுவித்துண்ணும் வேளாளரென்று கொள்ளத்தகும். இவர் முல்லைத்திணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; வாடைக் காற்றானது யானை பெருமூச்செறிந்தாற் போன்றதென்று இவர் கூறிய உவமை வியக்கத்தக்கது. இவர்பாடியது நற். அகூ.

## கஅ. இளம்போதியார்.

போதியார் என்றதனாலே இவர் புத்தசமயத்தினர் போலும். இவர் நெய்தற்றிணையைப் புனைந்து கூறியுள்ளார்; தலைமகன் வரையாது களவின் வருதற்கு அஞ்சுகின்றாளென்று தோழி கூறுவதாக இவர் கூறியது வியக்கத்தக்கது; நற். எஉ. இவர் பாடியது இப்பாட லொன்றேயாம்.

## ககூ. இளவெயினனார்.

எயினனென்னும் பெயர்க் காரணத்தால் இவர் வேட்டுவ மரபின ரென்று தெரிகின்றது. நெய்தற்றிணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; இவர் கூறிய உள்ளுறை வியக்கத்தக்கது. இவர் பாடியது நற். உசுங-ம் செய்யுள்.

## உ0. இளவேட்டனார்.

இளவேட்டனாரென்று அடைமொழி கொடாது கூறப்படுதலின் இவர் மதுரை அறுவைவாணிகன் இளவேட்டனாரின் வேறு போலும். இவர் பாலைத்திணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; கூதிர்ப்பருவத்து நதிகளில் நீர் குறைவதை வெகு அழகாகக் கூறியுள்ளார்; நற். கஙஎ. நற். முல்லைத்திணை உஉக-ஆம் பாட்டு இவர் பாடியதாக ஏடுகளிற் காணப்பட்டமையின் இருந்தபடி அச்சிடப் பட்டது. இப்பொழுது அஃது இடைக்காடனார் பாடலென்று தெரிகின்றது. அதனையொழித்தால் இவர் பாடியவை நற்றிணையில் இரண்டு பாட்டு. (ஙங, கஙஎ.)

## உக. இனிசந்த நாகனார்.

இவர் இனிய குரலொடு பாடவல்ல ராதல்பற்றி இவ்வடைமொழி கொடுக்கப்பட்டார் போலும். சந்தம்—குரல். இனிய சந்தம்

இனிசந்தமென விகாரப்பட்டு நின்றது. இவர் பாலையைப் புனைந்து பாடியுள்ளார்; இவர் பாடிய நற்றாய் மனைமருட்சி கேட்போர் யாரையும் மருளப்பண்ணும்; இவர் பாடியது நற். ௬௯-ம் செய்யுள்.

## ௨௨. உக்கிரப்பெருவழுதி.

இவன் பாண்டிய அரசன், தனக்குப் பகைவனாகிய வேங்கை மார்பனை வென்று அவனுக்குரிய கானப்பேரெயில் (காளையார் கோயில்) என்னும் ஊரைக் கைப்பற்றினவனாதலிற் கானப்பேரெயில் கடந்த பாண்டியன் உக்கிரப்பெருவழுதி யென்றுங் கூறப்படுவான்; புறம். ௨௧. மாவெண்கோ என்னுஞ் சேரமானுடனும், இராஜசூய யாகஞ் செய்த பெருநற் கிள்ளி என்னுஞ் சோழனுடனும் நட்புடையவன்; புறம். ௩௬௭. கடைச் சங்கத்தை யாதரித்தவன்; அச்சங்கப் புலவரோடு ஒப்பப் பாடும் ஆற்றலுடையவன்; ஔவையாராலும் ஆவூர் மூலங்கிழாராலும் புகழ்ந்து பாடப்பெற்றவன்; புறம். ௨௧. ௩௬௭. உப்பூரிகுடிகிழார் மகனார் உருத்திரசன்மனைக்கொண்டு அகநானூறு தொகுப்பித்தோன் இவனே. இவன் குறிஞ்சியையும் மருதத்தையும் புனைந்து பாடியுள்ளான். இவனது சபையிலே திருக்குறள் அரங்கேற்றினதாக ஒரு கதை வழங்குகின்றது. பல்லியடிக்குஞ் சகுனத்தைப் பன்றி ஆராயுமென் றிவன் கூறியது வியப்புடையதாகும்; நற். ௯௮. ஆற்றாமை வாயிலாகப் புக்குக்கூடிய தலைமகனீக்கத்துத் தலைவி இரவு இவ்வாறு நிகழ்ந்ததென்று கூறியதாக இவன் கூறுவது யாவரையும் மகிழ்விக்கும்; அகம். ௨௬. இவன் பாடியனவாக மேற்காட்டிய இரண்டு பாடல்களும், திருவள்ளுவமாலையி லொன்றுமாக மூன்று பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௨௩. உரோடோகத்துக் கந்தரத்தனார்.

இவர் கந்தரத்தன் என்னு மியற்பெயருடையவர். உரோடோகம் - ஊர். இவ்வூர்ப்பெயர் ஒரோடோகமெனவும், ஒரோடகமெனவும், உரோடகமெனவும் ஏடுகளிற் பலபடியாகப் பிறழ்ந்து காணப்படுகிறது. இப்பொழுது இவ்வூர் ஓரகடமென்று திரிந்து வழங்குகிறது; காஞ்சீபுரம் தாலூகாவிலுள்ளது. இவர் குறிஞ்சித் திணையையும் பாலைத் திணையையும் புனைந்து பாடியுள்ளார்;

இவர் பாடியனவாக நற்றிணையில் ௩0௬-ம் பாடலொன்றும், குறுந்தொகையிலொன்றும், அகத்தில் மூன்றுமாக ஐந்து பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௨௪. உலோச்சனார்.

இவர் நெய்தனிலத்தை மிகச் சிறப்பாக அமைத்துப் பாட வல்லவர்; சோழன் இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளியைப் பாடியிருத்தலானே அவன் காலத்தவரென்று தெரிகிறது; புறம்-௩௭௭. நற்றிணை ௧௩௧-ம் பாட்டிலும் அகத்திலும் பெரியனென்னும் வள்ளலையும் அவனது பொறையாற்றையுஞ் சிறப்பித்துக் கூறியுள்ளார். நற். ௩௮-ல் கடற்கரையின்கணுளதாகிய 'காண்டவாயில்' என்னும் ஊர் இவராற் கூறப்பட்டுளது; அதனைக் காண்டவாயில் எம்மூரூர் என்று பாராட்டிக் கூறி யிருத்தலானே இவர் அவ் வூரிலிருந்தவர்போலு மென்று கருதவுமாம். கடலிலுள்ள பலவகை மீன்களையும் உவமை முதலாய வற்றோடு தெளிவாகக் கூறுதலால் இவர் பரதவர் மரபினர்போலும். மற்றும் நற். ௭௪-ல் மருதத்து நிகழவேண்டிய பரத்தையிற் பிரிவினையும், நற். ௧௪௯-ல் பாலையில் நிகழவேண்டிய உடன் போக்கினையும், ஏனைப் பாடல்களில் குறிஞ்சியில் நிகழ்தற்பாலவாகிய களவொழுக்கம் அனைத்தினையும் நெய்தலில் நிகழ்ந்தனவாகவே வைத்துப் பாடிய ஆற்றல் வியக்கத்தக்கதாகும். நற். ௨௭௮-ல் புன்னைக்காயில் நெய்யெடுக்கும் வழக்கையும் நற். ௩௩௧-லும் அகத்திலும் மகளிர் உப்புக் குவட்டின்மேலேறி மின்பிடி படகுகளையெண்ணும் வழக்கையும் கூறியுள்ளார். இக்காலத்துத் திமிங்கிலத்தின் மீது எறியீட்டி வீசிப் பிடிக்கின்ற வழக்கம் பண்டைக் காலத்துமுளதென்று அகத்தில் இவர் பாடலா லறியப்படுகிறது. இவர் இத்துணைப்பாடலினும் பெரும்பாலும் களவொழுக்கத்தையே பாராட்டிப் பாடுதலால் களவியல் பாடுதலிற் சிறந்தவரென்று கொள்ளக் கிடக்கின்றது. நற். ௬௪-ம் பாட்டாகிய குறிஞ்சித் திணைச் செய்யுள் இவர் பாடியதாக எழுதியிருப்பது ஒருகால் ஏடெழுதினோர் தவறாயிருக்கலாம்; அஃது இவர் பாடியதன்று. மற்றும் தலைவன் பகற்குறி வந்து மீள்வானை இன்றிங்கிருந்து விருந்துண்டு செல்கவென்று கூறும் தோழி கூற்றில் அவனுக்கும் அவனுடைய குதிரைக்கும் ஆகாரமமைத்துக் கொடுக்குஞ் சிறப்பை நற்.

உ௫ச-லினும் அகத்தினும் விரித்துக் கூறுகின்றார். ஏனை நிலத்தினும் நெய்தனிலமே எந்நாளும் வருவாய்மிக்குளதென்று இவர் கூறும் (நற். ௬கக) பாடல் கல்வி யறிவில்லாதாரையும் இனிது மகிழ்விக்கும். இரவுக்குறி நேர்கின்ற தோழி கூறுமுகத்தானே நெய்தனிலத்தூர் தமர் ஒருவரை யொருவர் அறியாதபடி மக்கள் நெருக்கமிக்குடையதென்று நற். ௬௬௯-ல் சிறப்பிக்கிறார். கொல்லைப் படப்பைகள் கண்டல் மரங்களை வேலியாகவுடையன வென்று பல இடங்களிற் கூறுகிறார். இக்கண்டல் மாத்தின் கழி (கொம்பு) களே இக் காலத்திலே தோணிதள்ளுநபவர்க்குப் பற்றுக்கோடா யுள்ளன; அவை கண்டற்கழி யென்றே வழங்கப்படுகின்றன. விரிப்பிற் பெருகுமாதலின் இம்மட்டோடு நிறுத்தலாயிற்று. இவர் பாடியனவாக நற்றிணையில் இருபது (கக, ௬அ, ௬௯, ௬௪, எச, க௬க, க௪௯, க௯க, உ0௬, உஉ௬, உச௯, உ௫ச, உஎஅ, உஅஎ, ௬கக, ௬௬௩, ௬௫ச, ௬௭௬, ௬எஉ, ௬எஅ) பாடல்களும், குறுந்தொகையில் நாலும், அகத்தில் எட்டும், புறத்தில் மூன்றுமாக முப்பத்தைந்து பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## உ௫. உறையூர்க் கதுவாய்ச் சாத்தனார்.

கதுவாய்—முரிந்தவாய். இவ்வடைமொழி எக்காரணம்பற்றிக் கொடுக்கப்பட்டதோ தெரியவில்லை. இவர் மருதத்திணையிற் பயிற்சி யுடையவர். இவர் பாடலில் தலைவி ஊடியவழித் தலைவன் கூறுவது வியப்புடையதாகும். இவர் பாடியது நற். ௬எ0-ம் பாட்டு.

## எயினந்தைமகன் இளங்கீரனார்.

முன்வந்த (க௬) இளங்கீரனு ரென்பவர் இவரே.

## உ௬. எயினந்தையார்.

எயின் + தந்தை — எயினந்தை; எயினனைத் தந்தையாக வுடையவரென்பது; அன்றி இவர் பாடலில் 'எயின் மன்னன் போல' என்றிருத்தலால் இவ்வருந் தொடர்மொழிபற்றி இப் பெயர் கொடுக்கப்பட்டதோ தெரியவில்லை. இவர் முற்கூறிய (க௬) இளங்கீரனாரின் தந்தையாராவர்; பாலைத்திணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; தலைவன் மகிழ்ச்சியும் தலைவி துயரமும்

தோழி கூறுவதாக இவர் கூறியது ஆராயற் பாலது. இவர் பாடியது நற். ௪௩-ம் பாட்டு.

## ௨௭. ஐயூர் முடவனார்.

முடவனாரென்பது வடிவுபற்றிய பெயர். இவர் முடவர்; இவர தியற்பெயர் தெரியவில்லை. ஐயூர் - பாண்டிநாட் டகத்த தோரூர். இவர் பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதியின் ஆற்றலைச் சிறப்பித்து அரசவாகை பாடியவர்; புறம். ௫௧. குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனா லாதரிக்கப்பட்டு வந்தவர்: இவர் நடக்க இயலாமையின் ஓர் ஊர்தி (வாகனம்) வேண்டித் தாமான் தோன்றிக் கோனிடஞ் சென்று பரிசில் வேண்ட அவன் இவருக்கு உணவளித்தலும் அதனை விரும்பாராய்த் தாம் வந்த செய்தி தெரிவிப்ப அவ் வண்ணமே யானையும் அதற்கு வேண்டுவ பிறவும் நலகப் பெற்று மீண்டனர்; புறம். ௩௯௯. கிள்ளிவளவன் இறந்த தறிந்து பெரிதும் புலம்பி வருந்தினர்; புறம். ௨௨௮. அதியன் எதிரி போரிற் பட்டதைப் பாராட்டிக் கூறியுள்ளார்: அகம். ௨௧௬. இவர் நற். ௩௩௪-ல் கூறிய உள்ளுறை யாவரும் வியக்கத்தக்கது. இவர் குறிஞ்சியைப் புனைந்து பாடியுள்ளார்; முகப்புருகிளவி பாடியவருள் இவருமொருவர். இவர் பாடியனவாக நற்றிணையில் இரண்டு (௨௦௬, ௩௩௪) பாடல்களும், குறுந்தொகையில மூன்றும், அகத்திலொன்றும், புறத்தில் நான்குமாகப் பத்துப் பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௨௮. ஒருசிறைப் பெரியனார்.

இவர் நாஞ்சில் வள்ளுவனைப் பாடிப் பரிசில் பெற்றவர்; புறம். ௧௩௭. முல்லையையுங் குறிஞ்சியையும் புனைந்துபாடியுள்ளார். தலைமகனைத் தேர்ப்பாகன் தேற்றுவதாக இவர் கூறியது இன்பந் தரற்பாலது. இவர் பாடியனவாக நற்றிணையில் ௧௨௧-ம் பாடல் ஒன்றும் குறுந்தொகையி லொன்றும் புறத்தி லொன்றுமாக மூன்று பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௨௯. ஓரம்போகியார்.

ஏடெழுதுவோர் பிழையால் இவர் பெயர் ஓரம்போகியாரெனவும், காரம்போகியாரெனவும், தாம்போகியாரெனவுங் காணப்

படுகிறது. மருதத்திணையை விரித்து அந்நிலத்துள்ள கருப்பொருள்களைத் திணைக்கேற்ற பொருள்களாகக்கொண்டு உள்ளுறையுவமம், இறைச்சி முதலாய வற்றை யமைத்துப் பலவகைச் சதுவமும் புலப்படக்காட்டிப் பரத்தையிற் பிரிவு முதல் எல்லாவற்றையும் தெளிவாகக் கூறும் ஆற்றலுடையவர்; இவர் பாடியவற்றுட் புறமொன்றொழித்து ஏனைப் பாடலனைத்தும் மருதத்திணையே. இவராற் பாடப்பெற்றோர் ஆதன் அவனி, இருப்பையூர் விராஅன், பாண்டியன், சோழர், மத்தி முதலாயினோர். இத்தகைய மாதரோ காதலர்பாற் புலத்தற்குரியரென்று தோழிகூற்றாக இவர் கூறியது அருமைவாய்ந்தது; அகம். ருகரு; இதிற் கூறிய உள்ளுறை பாராட்டற்பாலது. புணர்ச்சியின்பங் கூறித் தலைவியைப் புகழ்வது மகிழ்ச்சி தரற்பாலது; குறு. எo. இவர் பாடியனவாக நற்றிணையில் இரண்டு (உo, ருருo) பாடல்களும் குறுந்தொகையில் நாலும், ஐங்குறுநூற்றில் முதல் கoo-ம் அகத்தில் இரண்டும், புறத்தில் ஒன்றுமாக கoகூ பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

இவர் பாடிய "வெள்ளிவீழுத்தொடி" என்ற அகம் உஅகூ-ம் பாடலை யெடுத்து உடன்பாடாக நக்கீரனார் குறிப்புரை (களவியல். கஅ) கூறியதும், அதனை நச்சினார்க்கினியர் "பெரியோரொழுக்கம் பெரிதெனக் கொண்டு - பெறுதகையில்லாப் பிழைப்பினும்" (தொல். பொருள். கருo.) என்றதன்கீழ் நக்கீரனார் கூற்றுக்கெதிர்மறையாகக் குறிப்புரை கூறியதும் ஆராயத்தக்கது.

## ருo. ஔவையார்.

இவர் சரிதம் பலவாறாகப் பலருங் கூறியிருக்கின்றதனால் அவற்றைப் பெரும்பாலும் விடுத்துச் சங்கநூலின் துறை கூறிய அளவுக்கு எழுதுகிறேன்.

இவர் பாணர் மரபினர். இளமையில் விறலியாராக ஆடல் பாடல் முதலியவற்றிலே தேர்ந்து விளங்கியவர்; புறம். அகூஎ தம்மை விறலியென்று தாமே கூறுமாற்றானறிக. இவர் ஒரு காலத்துத் தகடூரில் அரசாண்ட 'அதிகமான் நெடுமான் அஞ்சி' என்பானிடம் பரிசில் பெறச்சென்று அவன் பரிசில் கொடாது நீட்டித்தலானே சினந்து மீள்வாராயினர்; புறம். உoசு. அதனை

யறிந்த அஞ்சி அஞ்சிவந்து வேண்டிய பரிசில் உதவ அதனைப் பெற்று மகிழ்ந்தனர்; புறம். ருகூ0. இவர் அவனால் கொடுக்கப் பட்ட கருநெல்லிக் கனியையுண்டு நெடுங்காலஞ் சீவித்திருந்தனர்; புறம். கூக. குறள் க00-ம் பாட்டின் விசேடவுரையைப்பார்க்க. அஞ்சி யொடு பெருஞ்சேரலிரும்பொறை போர்செய்ய வந்தபொழுது அப்பகை யாசனோடு அஞ்சியைப் பல படியாகப் புகழ்ந்து கூறி யுள்ளார்; புறம். அஎ, அஅ, அகூ. அவ் அஞ்சி கோவலூரை வென்றபொழுது அவனைப் பலவாறாகப் புகழ்ந்து பாடினர்; புறம். கூகூ. அல்லாமலும் புறம். கூ0, கூஉ-ம் பாட்டுக்களில் அவனது வீரத்தன்மையை யெடுத்துச் சிறப்பித்துள்ளார். அவனோடு பெருஞ் சேரலிரும்பொறை போர்செய்த காலையும் அவன் பொருது புண்பட்டு நின்றகாலையும் இவர் பாடிய செய்யுட்கள் படிப்போர் மனத்தை யுருக்குந் தன்மையவாகும். இவ்வாறு அவனைப் பாடிய தன்றி அவன் மகன் பொருட்டெழினியையும் பல படியாகப் புகழ்ந்து பாடியுள்ளார்; புறம். கூஈ, க0உ. அதிகமான் ஒரு கால் இவரைத் தொண்டை மானிடத்துத் தூதாக விடுப்பச்சென்ற பொழுது தொண்டைமான் தன் படைக்கலச்சாலையைக் காட்டக் கண்டு அது தலைக்கீடாக அதிகனைப்புகழ்ந்து பாடினர்; புறம். கூரு. பின்பு அஞ்சி இறந்ததுகண்டு ஆற்றாது புலம்பினார்; புறம். உருக, உருஉ, உருரு. இவர் கள்ளுண்ணுதலையும் ஊன் உண்ணுதலையும் மிகப் பாராட்டிப் பாடியுள்ளார்; புறம். உருரு, உகூ0.

மற்றொரு காலத்துக் கொண்கானநாட் டதிபனும் ஏழில் மலைத் தலைவனுமாகிய நன்னன்பாற் சென்று சிறந்த பாடல்களைப் பாடிப்பொருள் கூறி மகிழ்விக்கவும் அவன் அவற்றைப் பாராட்டினா னல்லனாக, அது கண்ட ஔவையார் முனிந்து "இருடீர் மணி விளக்கத் தேழிலார் கோவே, குருடேயு மன்றுநின் குற்றம் - மருடீர்ந்த, பாட்டு முறையும் பயிலா தனவிரண், டோட்டைச் செவியு முளை" என்று பாடி வெறுத்து மீண்டனர்.

இவர் அகத்துறையில் ஐந்து திலங்களையுஞ் சிறப்பித்துப் பாடும் ஆற்றலுடையார். வெள்ளிவீதியார் தம் கணவனைத் தே டிச் சென்றதைப் பாராட்டிக் கூறியுள்ளார்; அகம். கசஎ. மூ வேந்தரும் கொடை வள்ளலாகிய பாரியின் பறம்புமலை (பிரான் மலை)யை முற்றியிருந்தபொழுது பாரி கிளிகளை விடுத்துப் புறத் திருந்த நெற்கதிரைப்பெற்றுச் சீவித்திருந்ததைச் சுருக்கி விளங்

க்கூறியுள்ளார்; அகம். ௩0௩. அவ்வரசர்கள் பாரியை வஞ்சித்துக் கொன்று அவனது மலை முதலியவற்றைக் கைக்கொள்ளலும் அதுகாறும் மணம்புரியாதிருந்த பாரிமகளிரிருவரையும் அழைத்துச் சென்ற கபிலர் விச்சிக்கோ, இருங்கோவேள் ஆகிய இருவரிடத்துஞ் சென்று இம்மகளிரிருவரையும் மணம்புரிந்து கொள்கவென வேண்டினார். அவர்கள் மறுத்தனராக உடனே தம்மை யடுத்திருந்த அந்தணர்களின் பாதுகாவலில் அவர்களை வைத்துவிட்டுச் சோநாடு சென்றனர். அப்பால் அங்கு வந்த ஒளவையார் பாரிமகளிர்க ணிலையை யறிந்து அவ்விருவரையும் உடனழைத்துச்சென்று திருக்கோவலூரை யடைந்து மலையமான் தெய்வீகனென்பானுக்கு மணம்புரிவித்து மீண்டருளினார். இவர் காமநோயை மரமாக உருவகஞ் செய்திருப்பது வியப்புடையது; அகம். ௨௭௩. முகம்புகுகிளவி பாடியவருள் இவருமொருவர். இவராற் பாடப்பெற்றோர் அஞ்சி, அவன் மகன் பொருட்டெழினி, பாரி, பாண்டியன் உக்கிரப்பெருவழுதி, சேரமான் மாவெண்கோ, சோழன் இராஜசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, கிள்ளிவளவன், தொண்டைமான், முடியன், கொண்கானத்து நன்னன் என்பவர்கள். இவர்பாடியனவாக நற்றிணையில் ஏழு (௧௨௯, ௧௮௭, ௨௬௫, ௩௭௧, ௩௮௧, ௩௯0, ௩௯௪) பாடல்களும், குறுந்தொகையில் பதினொன்றும், அகத்தில் நாலும், புறத்தில் முப்பத்து மூன்றும், திருவள்ளுவமாலையி லொன்றுமாக அறுபது பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௩௧. கச்சிப்பேட்டு இளந்தச்சனார்.

தச்சனாரென்றதனால் இவர் கம்மாளரென்று தெரிகிறது. கச்சிப்பேடு - ஓரூர்; காஞ்சிபுரத்தைச் சார்ந்தது. இவர் முல்லைத்திணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; இவர் பாடியது நற். ௨௬௬-ம் பாட்டு.

## ௩௨. கச்சிப்பேட்டுப் பெருந்தச்சனார்.

இவர் முற்கூறிய இளந்தச்சனாரின் முதியோரென்பதுதோன்றப் பெருந்தச்சனாரெனப்பட்டார். இவர் குறிஞ்சித்திணையைப் பாடும் வன்மையுடையார்; இளந்தச்சனார் முல்லையைப்பாடியுளர். மதியுடன்படுக்குந் தலைமகன் நீவிர் யாவிரென வினையதாக இவர்

கூறியது சிறப்புடையதாகும்; நற். ௨௧௩. இவர் பாடிய பாட்டு இரண்டு; நற். ௧௪௪, ௨௧௩.

## ௩௩. கடுவனிளமள்ளனார்.

இவரே அகத்தில் மதுரைத் தமிழ்க்கூத்தன் கடுவனிளமள்ளனாரெனவும் கடுவன் மள்ளனாரெனவுங் கூறப்படுபவர். இவர் இயற்பெயர் மள்ளன். கடுவன் இளவெயினனார் எனப் பரிபாடலில் ஒருவர் பெயர் காணப்படுதலால் கடுவன் என்பது ஒருவரின் பெயர்போலும். அக்காலத்துத் தமிழ்ப்பற்றுக் கூத்தாடுந் தொழிலுடைமையாலே தமிழ்க் கூத்தனெனவும், மதுரையில் வந்து தங்கியதனால் மதுரைத் தமிழ்க்கூத்தன் கடுவனிளமள்ளனெனப் பட்டாரெனவுங்கொள்க. பாண்டியன் மாறன் வழுதியைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; நற். ௧௫0. இராமபிரான தென்கடற் கரையகத்துக் கடலடைக்கவேண்டிச் சூழ்ச்சி செய்திருந்த கதை யொன்றனை யமைத்துக் காட்டினார்; அகம். ௭0. முல்லை, குறிஞ்சி, மருதமுதலாய திணைகளைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் பாடியனவாக நற்றிணையில் ௧௫0-ம் பாடலொன்றும், குறுந்தொகையிலொன்றும், அகத்தில் இரண்டுமாக நாலுபாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௩௪. கண்ணகனார்.

இவர் இயற்பெயர் நாகன்; கண்ணனுடைய மகனாதலிற் கண்ணனாகனார் என்றும் சொல்லப்படுவர்; சில ஏடுகளிற் கண்ணகனாரென்று, பிழைபட எழுதியிருந்தமையால் இருந்தபடியே பதிப்பிக்கப்பட்டது. இவர் கோப்பெருஞ் சோழன் பிசிராந்தையார் முதலானோர் காலத்தவர்; புறம். ௨௧௮. பரிபாடல் ௨௧-ஞ் செய்யுளுக்கு இசைவகுத்தவரிவரே. பாலைத்திணையைப் புனைந்து பாடியுள்ளார். காதலன் பிரிதலைத் தவிர்க்குமாறு தலைவி ஆராய்வதாக இவர் கூறியது ஆராயத்தக்கது; நற். ௭௯. இவர் பாடியனவாக மேற்காட்டிய பாடலொன்றும் புறத்திலொன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ரு௫. கண்ணகாரன் கொற்றனார்.

இவரது இயற்பெயர் கொற்றனார். கண்ணகாரன் என்பது விளங்கவில்லை. இவர் பாலையைப் புனைந்து பாடியுள்ளார். இவர் பாடிய மனைமருட்சி யாவரையும் மருட்டா நிற்கும்; இவர் பாடியது நற். கசரு-ம் பாட்டு.

## ரு௬. கண்ணங் கொற்றனார்.

இவர் இயற்பெயர் கொற்றனார்; இது கண்ணனென்னுந் தந்தை பெயரொடு சேர்ந்து கண்ணங்கொற்றனா ரென்றாயிற்று. இவர் குறிஞ்சியைப் புனைந்து பாடியுள்ளார்; தலைவன் இரவுக் குறி வருகின்றதன் அருமையும் தலைவி அவன்பால் வைத்துள்ள அன்பும் தோழிகூற்றாக விளங்கக் கூறுகின்றார். இவர் பாடியது நற். கருசு-ம் பாட்டு.

## ருஎ. கண்ணம் புல்லனார்.

கருவூர்க் கண்ணம் புல்லனாரென்பவ ரிவரே. ஊர் கருவூர்; கண்ணன் தந்தைபெயர்; புல்லன் இயற்பெயர். நெய்தற்றிணையும் பாலைத்திணையும் பாடியுள்ளார். புணர்ந் துடன்போகக்கண்ட செவிலி சுரத்திடை மறவர் நிரைகொணர்ந்துய்ப்பதும் அங்கு அவர் முழங்கும் முழக்கமுங் கேட்டு என்பேதை யாங்ஙனம் வைகுமோ வென்று புலம்புவதாக விரித்துக் கூறியுள்ளார்; அகம். சுரு. இவர் பாடியனவாக நற்றிணையில் கருகூ-ம் பாடலொன்றும், அகத்திலொன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ரு௮. கணக்காயனார்.

தமிழாசிரியர்க்குத் தமிழ்க்கணக் கென்றும், நெடுங்கணக் கென்றும் பெயருண்டு; ஆயம் - கூட்டம்; கூட்டமாகப் பிள்ளைகளைச் சேர்த்துவைத்துத் தமிழ்க்கணக்கைப் பயிற்றுவித்தலால் உவாத்தியாயர் கணக்காயரெனப்பட்டார்; அங்ஙனமே இவரும் பிள்ளைகளுக்கு உவாத்தியாயரா யிருந்தமையிற் கணக்காயனா ரெனப்பட்டார்; குறுந்தொகை ௩௦௪-ம் பாட்டின்கீழ்க் கணக்காயன் தத்தன் என் றெழுதியிருத்தலால் இவரது இயற்பெயர்

தத்தனென்பதே. கூரைக் கணக்காயனென்று அகத்தில் காணப் படுகிறது; மதுரை யென்பதில் மகரம் செல்லரித்துவிட எஞ்சிய துரை யென்பது பொருள்பயவாமையால் துரையைக் கூரை யென்று திருத்தி யெழுதியிருக்கலாம்; இங்ஙனம் ஏடெழுது வோரால் மதுரை யென்பது கூரையென்றாயிற்று. இவர் நக்கீர னார்க்குத் தந்தையாரென்னும் பதவி வாய்ந்தவர்; குறிஞ்சி நெய் தல் வளங்களைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; வேங்கடமலையையும் பாண்டியரது கொற்கையின் முத்துக்களையும் புகழ்ந்து கூறியுளார்; அகம். உஎ. பாண்டியரது பொதியில் மலையும், சேரமானது கொல்லி மலையும் சோழரது காவிரியும் இவராற் பாராட்டப்பட் டுள்ளன; அகம். ௬௩அ. எறியீட்டி வீசித் திமிங்கிலத்தைப் பிடிப்பது இவர் பாடலிற் கூறப்பட்டுள்ளது; குறு. ௩0ச. இவர் பாடியனவாக நற்றிணையில் உ௩-ம் பாடலொன்றும், குறுந் தொகையி லொன்றும், அகத்தில் மூன்றும், புறத்தி லொன்று மாக ஆறு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௩௯. கணி புன்குன்றனார்.

நற்றிணை ஏடுகள் பலவற்றினும் கணி புன்குன்றனாரென்றே யிருத்தலின் அவ்வாறே பதிப்பிக்கப்பட்டது; புறநானூற்றிற் கணியன் பூங்குன்றன் என்றிருக்கின்றது. அது சிறப்பாகக் காணப்படுகிறது. பூங்குன்ற மென்னு மூரிலுள்ள கணியனென்று பொருள்படும். கணியன் சோதிடஞ் சொல்வோன். இவர் வாக்கு யாங்கும் பொதுநோக்கா யுள்ளது. பாலையைப் பாடியுள்ளார். மாந்தரியல்பும் அரசரியல்பும் உலகத்தியல்பும் இத்தன்மைய வென்று தலைவி கூற்றாகக் கூறியது ஆராயத்தக்கது; நற். உஉ௬. இவர் பாடியனவாக மேற்காட்டிய பாடலொன்றும் புறத்திலொன் றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ச0. கதப்பிள்ளைச் சாத்தனார்.

இவர் கருவூர்க் கதப்பிள்ளைச் சாத்தனாரெனவும், கதப்பிள்ளை யெனவும், கருவூர்க் கதப்பிள்ளை யெனவும் பலவாறாகக் கூறப்படு வார். இவர் இயற்பெயர் சாத்தனாரென்பதே. சேரமான் சேனாபதி பிட்டங்கொற்றனைப் பரிசில்வேண்டிப் பாடியவர்; புறம். கசுஅ.

பாண்டியன் சேனாபதி நாஞ்சில் வள்ளுவனைப் பரிசில் வேண்டி இயன்மொழி பாடியவர்; புறம். ௩௮௦. பெரும்பாலும் பாலைத் திணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; இவர் மாலைக்காலத்தை அழகாகப் புனைந்து கூறியிருக்கிறார்; நற். ௩௪௩. தலைவனைப் பிரிந்ததனால் இவ்வூர்த் தோற்றம் இனிதாகக் காணப்படவில்லை யென்ற தலைவி கூற்று வியப்புடையது; நற். ௧௩௫. இவர் பாடியனவாக நற்றிணையில் மேற்காட்டிய இரண்டு பாடல்களும், குறுந்தொகையில் மூன்றும், அகத்தில் ஒன்றும், புறத்தில் இரண்டு மாக எட்டுப் பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## கந்தரத்தனார்.

இவர் உரோடோகத்துக் கந்தரத்தனாரின் வேறல்லர் என்று எண்ணப்படுகின்றது. மேலே (௨௩) பார்க்க.

## ௪௧. கபிலர்.

இவர் பாண்டி நாட்டிலே திருவாதவூரில் (பழைய திருவிளையாடல், ௨௭-ம் விளையாடல், செய்யுள், ௪.) அந்தணர் மரபிலே பிறந்து (புறம். ௧௨௬, ௨௦௦, ௨௦௧.) வளர்ந்து உரிய பருவத்திலே கல்வி கற்பிக்கப் பெற்றுத் தமிழில் ஒப்பாரு மிக்காரு மில்லாத பயிற்சி யுடையாராய்க் கடைச் சங்கப் புலவரி லொருவராகிப் பரணர், இடைக்காடர், ஔவையார் முதலாயினோரிடத்துப் பெருகிய நட்புடையராய் விளங்குவாராயினர்.

முன்பொருகால் சேரமான் செல்வக்கடுங்கோ ஆழியாதனைப் பாடி அவனை மகிழ்வித்தனர்; புறம். ௮. அவன் இவருடைய கையைப்பற்றி நும்முடைய கை மிக மெல்லியவா யிருக்கின்றன வெனலும் அவனை நோக்கி நீ போரில் பகைவரை வெல்ல அமைந் ததனால் நின் கைகள் வலியவாகும்; நின்னைப் பாடுபவர் உண்டு வருந்துஞ் செயலல்லது வேறு தொழில் செய்தறியா ராதலால் அவர்களின் கைகளெல்லாம் மெல்லியவே யென்று பாடி யுவப்பித் தார்; புறம். ௧௪. பின்பு கடையெழுவள்ளளி லொருவனாகிய வேள்பாரியை உயிர்த்தோழமைகொண்டு அவனது அவைக்களத் துப் புலவராக வீற்றிருந்தருளினர். அக்காலத்துப் பாரியைப் பாடிய பாடல்கள் கருதுவோ ருள்ளத்தை மகிழ்விக்குந் தன்மை

யன ; புறம். கா௦௬ முதல் பார்க்க. அங்ஙன மிருக்கு நாளில் இடையே திருக்கோவலூரை யடைந்து முள்ளூரின்கணுள்ள மலையமான் திருமுடிக்காரியைச் சிறப்பித்துப் பல படியாகப் புகழ்ந்து பாடி, அவன் பரிசில் கொடுக்கப் பெற்று மீண்டனர் ; புறம். கஉக முதல். பின்பொருகால் வையாவிக்கோப் பெரும்பேக னிடஞ் சென்று அவனால் துறக்கப்பட்ட கண்ணகி காரணமாக அவனைப் பாடி மீண்டு பாரியிடத்திருந்தார் ; புறம். கசங. இருக்கும்பொழுது பெரும்பாலும் பாரியினது பறம்பு மலையிற் பழகினவராதலாற் குறிஞ்சித்திணை பாடுதலிற் சிறந்தவராயினர். ஆரியவரசன் யாழ்ப்பிரமதத்தனைத் தமிழின் சிறப்பு அறிவுறுத் தற்குப் பத்துப்பாட்டு ளொன்றாகிய குறிஞ்சிப்பாட்டுப் பாடி யருளினர். அதனையறிந்த அவன் தமிழ்பயின்று சங்கத்தாரோ டொப்பப் பாடுந் திறமையடைந்தனன். அவன் பாடியது குறு. கஅச-ம் செய்யுள். இவர் இன்னாநாற்பது என்னும் நீதிநூல் பாடிச் சங்கத்தில் வெளியிட்டருளினர். இது பதினெண் கீழ்க்கணக்கினுள் ஒன்று.

இவரடுத்திருந்த வேள்பாரி கொடையாலெய்திய புகழ் இத் தமிழ்நாடெங்கும் பரவலானே அதனைக் கேள்வியுற்ற மூவேந்த ரும் பொறாமைகொண்டு படையெடுத்து வந்து பாரியின் பறம்பு மலையை முற்றுகை செய்தார்கள் ; அது கண்ட கபிலர் அவர்க ளிடஞ் சென்று பாரியின் புகழனைத்தையுங் கூறி அவ்வள்ளலுக்கு முந்நூறு கிராமங்களிருந்தன அவற்றையெல்லாம் பரிசிலர் பெற் றுக்கொண்டனர் ; இப்பொழுது அனைத்து பறம்பு மலை யொன்றே யுளது; நீங்களும் பாடிச் சென்றால் அதனைப் பெறலா மென்று அஞ்சாது கூறினர் ; புறம். கக௦. அப்பால் அம் மூவரசரும் பாரியை வலிதினழைத்துப் போர்புரிந்து கொன்று அம்மலையையுங் கைப்பற்றிக்கொண்டார்கள் ; புறம். கக௨. கைப்பற்றியவுடன் பாரியின் புதல்வியர் இருவரையும் இவர் அழைத்துக்கொண்டு பறம்பு மலையைநோக்கிப் பலவாறு புலம்பி (புறம். கககூ முதல் க௨௦ வரை.) அதனை விடுத்தகன்று விச்சிக்கோன் என்னுஞ் சிற்றரச னிடஞ்சென்று இப்பெண்களை மணஞ்செய்துகொள் ளென்றனர்; புறம். ௨௦௦. அவன் உடன்படாமை கண்டு புலிகடிமாலென்னும் இருங்கோவேளிடம் போய் இம்மகளிரை மணம்புரிந்து கொள் ளென்று கேட்ப (புறம். ௨௦க.) அவனும் மறுத்தானாக, அது கண்டு

அவனை வெறுத்து (புறம். உ0உ.) மீண்டு அவர்களைப் பார்ப்பாரின் பாதுகாவலில் வைத்துப் பின்னர்ச் சேரலன் செல்வக் கடுங்கோ ஆழியாதன் பாரிபோன்ற நற்குணமுடையா னென்ப தறிந்து அவ னிடஞ் சென்று பதிற்றுப்பத்து ஏழாம்பத்துப் பாடி, அவனைப் புகழ்ந்து கூறி, அவன் அளவிறந்த பரிசில் கொடுக்கப் பெற்று மீண்டனர்; (பதிற்று. ஏழாம் பதிகம்.) மீண்டும் பாரியைப் பிரிந்தத னாலாய துன்பம் மிகுந்து தாமும் உயிர்விடத் துணிந்து அவனோ டென்னை விதிகூட்டுவதாகவென்று (புறம். உருரு.) கூறி வடக்கு முகமாக விருந்து இந்திரியங்களை ஒடுக்கி ஆகாராதி வேண்டாது உயிர் துறந்தருளினார்.

இவர் குறிஞ்சித்திணையில் வல்லவராதலின் அதற்குரிய கொல்லிமலை, பறம்புமலை, முள்ளூர்மலை, முள்ளூர்க்கானம் இவற்றை யெல்லாம் பாராட்டிக் கூறி யுள்ளார். "வாய்மொழிக் கபிலன்" (அகம். எஅ.) என்று நக்கீரராலும், "நல்லிசைக் கபிலன்" (பதிற்று. அரு.) என்று பெருங்குன்றூர் கிழாராலும், "வெறுத்த கேள்வி விளங்கு புகழ்க் கபிலன்" (புறம். ருங.) என்று பொருந்தில் இளங்கீரனாராலும் "புலனழுக்கற்ற வந்தணா ளன்" (புறம். கஉசு.) "பொய்யா நாவிற் கபிலன்" (புறம். கஎச.) என்று மாறோக்கத்து நப்பசலையாராலும் சிறப்பித்துப் பாடப்பெற்றவர். மூவேந்தரால் முற்றிய பாரி கபிலரது சூழ்ச்சி யால் கிளிகளை விடுத்துக் கதிர்கொணர்ந்து உண்டிருந்தமையை நக்கீரர் சிறப்பித்துக் கூறுநிற்பர்; அகம். எஅ. ஔவையாரும் அச்செயலைப் பெரிதும் பாராட்டாநிற்பர்; அகம். ௩0௩.

இவர் மலைக்கு மாயோனை உவமைகூறினதன்றி "நாடாது நட்டலின்" என்ற குறளின் கருத்தை அமைத்துள்ளார்; நற். ௩உ. வேட்டுவன் பெறும் உணவுப்பொருளை விளக்குகிறார்; நற். ருசு. சகுனச் சிறப்புக் கூறுநிற்பர்; நற். சுரு. புலவியுணர்த் தலினின்பத்தைப் பெரிதும் பாராட்டிக் கூறுகின்றார்; நற். உகஎ. முருகவேளைக் கூறியுள்ளார்; நற். உஉரு. பாரியின் பறம்பு மலையைப் பாராட்டிக் கூறியிருக்கிறார்; நற். உரு௩. முள்ளூர் மன்னன் காரி குதிரைமேற் சென்று இரவில் நிரைகவர்ந்து வரு வதைச் சிறப்பிக்கிறார்; நற். உசுக. கொல்லிமலையில் ஓரியைக் கொன்று அவனது நகரிற் காரி சென்றமையும் ஆங்குள்ளார்

பெரும் பூசலிட்டமையுங் கூறுகிறார்; நற். கூஉ௦. குறமகள் பலவின்சுளையை மந்திக்கு விருந்தாகக் கொடுக்கு மலைநாடனென வருணிக்கிறார்; நற். கூ௫கூ. யாவரும் வியக்கத்தக்க உள்ளுறையே கூறியுள்ளார்; நற். கூஎகூ. இவர் பாடிய கிள்ளைவிடு தூது மிக்க இனிமையுடையது; நற். கூஎசு. தலைவியைச் சிறு கொம்பாகவும் அவள் கொண்ட காமத்தை அதனிடத்துத் தூங்கும் பெரும்பழமாகவும் கூறுவர்; குறு. க௮. இயற்கைப் புணர்ச்சிக்கட் குருகிருந்தது சாட்சியாக வெனத் தலைமகள் கூற்றாகக் கூறுவர்; நற். உ௫. இவர் குறு. கூ௮-ம் செய்யுளிற்கூறிய உள்ளுறையைத் திருக்கோவையாரிலெடுத்தாண்டமையறிக. (திருக்கோவை உஎசு.) ஓரியின் கொல்லி மலையிலுள்ள பாவையைச் சிறப்பித்துக் கூறுவர்; குறு. க௦௦. இவர் மலையமான் திருமுடிக் காரியையும் (குறு. ககூ௮, கூகஉ.) நள்ளியையும் (அகம். உகூ௮.) சிறப்பித்துக்கூறு நிற்பர். தலைமகன் மலையை நோக்கியவுடன் பசலை தீர்ந்ததெனத் தலைவி கூறியதாக இவர் பாடியது வியக்கத்தக்கது; குறு. உசகூ.

இவர் பாடியனவாக நற்றிணையில் பத்தொன்பது (ககூ, கூஉ, ௫கூ, சு௫, எஎ, உகஎ, உஉஉ, உஉ௫, உ௫கூ, உசுஎ, உகூக, கூ௦கூ, கூஉ௦, கூகூசு, கூ௫கூ, கூ௫கூ, கூசு௮, கூஎகூ, கூஎசு.) பாடல்களும், குறுந்தொகையில் இருபத்தொன்பதும், ஐங்குறுநூற்றில் குறிஞ்சிப்பாட்டு நூறும், பதிற்றுப்பத்தில் ஏழாம் பத்துச் செய்யுள் பத்தும், அகத்தில் பதினாறும், புறத்தில் இருபத்தெட்டும், 'நெட்டிலையிருப்பை' என்ற தனிச்செய்யுளொன்றும், திருவள்ளுவமாலையிலொன்றுமாக உ௦ச செய்யுளும், இன்னா நாற்பதில் நாற்பது செய்யுளும், குறிஞ்சிப் பாட்டு (பத்துப்பாட்டில் ஒன்று) ஒன்றுமாக உசசு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

கபிலர்செய்த வேறு பிரபந்தங்கள் சில பதினோராந் திருமுறையிற் சேர்க்கப்பட்டுள்ளன.

## சஉ. கயமனார்.

இவர் பாலைத்திணையில் உடன்போக்கையும் அதனை யடுத்த செவிலி புலம்பல், நற்றாய் புலம்பல், மணமருட்சி, கண்டோ

ரிரக்கம் முதலாய புலம்பல்களையும் பலவாறாகச் சிறப்பித்துப் பாடவல்லவர்; அங்ஙனம் பாடிய பாடல்களனைத்தும் கேட்போ ரின் கன்மனத்தையும் கரைக்குந் தன்மையன. அகத்திலன்றிப் புறத்திலும் புலம்பற்றுறையாகிய முதுபாலையைப் பாடியுள்ளார். (புறம். உருச.) (முதுபாலை காவலனிறப்ப ஏனையோர் புலம்பல்) ஆகவே இவர் இருதிணையிலும் புலம்பல் பாடவல்லவராய் விளங்கு கிறார். அகம். கசரு-ல் அன்னியும் திதியனும் பொருததனைக் கூறுதலால் அவ்விருவர் காலத்துக்கும் பிற்பட்டவராவார். கழங் குக் குறிபார்க்கும் நெறியை வெகு தெளிவாகக் கூறியவர் இவரே; அகம். ககூரு. அழிந்த பாலையை வளமுடையதாக்கிக் கூறும் இவரது ஆற்றல் மிக நன்று; அகம். உருகூ. உடன்போக்கின் கண் அறத்தொடு நின்று போக்கினை மறுத்து அஞ்சுவித்ததாகப் புதிய நெறி காட்டி யெழுதியவர் இவரே; நற். கஉ. இதனைப் பெரிதும் பாராட்டி இந்நெறியே நக்கீரனாரும் உரைகூறிப் போயி னாரென்றால் இவர் பாடலின் சிறப்பு இவ்வளவினதென் றளவிடற் பாலதோ? இறையனாரகப் பொருள் உரு-ம் சூத்திரவுரை. புண் + தாள்=புட்டாள் எனப் புதுவிதி வகுத்தவரில் இவருமொருவர்; நற். உஎகூ. தலைமகன் தலைமகளாகிய இருவருடைய தாயர்களும் ஒருவரை யொருவர் கடிந்து கூறும் வழக்கு இந்நாள் போலப் பண்டுமுளதென்பது இவர் பாடலா லறியலாம்; நற். உகூரு. முன்னாளிற் காலாற் பந்துருட்டும் வழக்குளதென்பது நற். ருஉச-ம் பாடலால் விளங்கும். இன்னும் நன்றாக ஆராயுங்கால் இவர் உலக வழக்கமுற்றும் தெளிவாக அறிந்தவரென்று தோன்றுகின்றது. இவர் பாடியனவாக நற்றிணையில் ஆறு (கஉ, ககூஅ, உஎகூ, உகூரு, ௩0௫, ருஉச.) பாடல்களும், குறுந்தொகையில் நாலும், அகத்தில் பன்னிரண்டும், புறத்தில் ஒன்றுமாக இருபத்து மூன்று பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## சரு. கருவூர்க் கோசனார்.

இவர் பாலைத்திணையிற் பயின்றவர்; தமது பாடலில், சோம்ப லாய்ச் செயலற்றிருப்பவர்க்குக் கீர்த்தியும் இன்பமும் கொடைத் தன்மையுமாகிய இவை யில்லையாகுமென்று தெளிவாகக் கூறியுள் ளார். இவர் பாடியது நற். உகச-ம் பாட்டு.

## சச. கழார்க் கீரனெயிற்றியார்.

இவர் எயிற்றி யென்னும் இயற்பெயருடையார்; கீரன் என்பவரின் மனைவியார்; பெண்பாற் புலமையார்; சோழநாட்டு மாயூரத்தின் கீழ்பாலுள்ள கழார் என்னுமூரினர்; "வெல்போர்ச் சோழர் கழாஅர்க் கொள்ளும்" நற். உஅக. வேட்டுவ மரபினர்; இவர் கணவன் கீரனாரென்பவர் சோழர்க்குப் படைத்துணையாகச் சென்று போர்முகத்துப் பொருது வெற்றிதருந் தன்மையார்; "காய்சின வேந்தன் பாசறை நீடி, நந்நோ யறிபா வறனி லாளர்" அகம். உகூச. ஆயினும் பிரிந்தாற் காமநோயாற் காதலி வருந்துவளென்பதுபற்றிப் பெரும்பாலும் காதலியை விட்டுப் பிரிபவரல்லர்; "கோடைத் திங்களும் பனிப்போள்" நற். நிகஉ. இங்ஙனம் பூவும் மணமும் போலப் பிரியா துறைபுநாளில் ஒருகாற் போருக்குச் செல்லவேண்டினமையிற் கீரனார் போர் பெரிதாயிற்றே வாடைக் காலத்தும் வருதற்கியலாவாறு அங்கு வைகவேண்டியதாகுமே யென்று பலவாறுகவன்றார்; அவர் வருந்துவது கண்ட எயிற்றியார் யான் பொறுத்திருக்கின்றேன் நீவிர் குறித்த பருவத்து வருவீராக வென்று காதலனைத் தேற்றிவிடுத்து அவர் வருந்தியதைத் தொகுத்து வினைவயிற் செல்லுந் தலைமகன் நெஞ்சைநோக்கி வருந்தியதாகப் பாடிவைத்தனர்; நற். நிகஉ. பின்னர்ப்பெரும் போர் நடந்ததனாற் குறித்த பருவத்து வாராமல் கீரனார் பாசறையினின்றுவிடலும் எயிற்றியார் மழை பெய்கின்ற நடுயாமத்திற் குளிரின் கடுமைதாங்க வியலாது கண்ணுறக்கங் கொள்ளாது நம்மைக் கருதாத காதலர் அன்பிலரெனத் தோழியை நோக்கி வருந்துவாராயினார்; நற். உஅக. வருந்தும்போது கண்ணீர் வடிய அதனைக் "காதலர்ப் பிரிந்த கையறு மகளிர், நீர்வார்கண்ணிற் கருவிளை மலர" எனத் தாமே குறிப்பித்துளார்; அகம். உகூச. அங்ஙனங் கண்ணீர் வடிதலும் எம்மை வாடைக் காலத்தும் பிரிந்தவரைக் கருதி அழுதலால் எமது கண்கள் வெட்கமுடையன வல்லவென்று வெறுத்துக் கூறியும், (குறு. நிரு.) என்னெஞ்சு அவரைக் கருதிப் புண்பட்டதனால் அது வருந்தவேண்டுவதாயிருப்ப யாதொரு தொடர்பு மில்லாத என் கண்கள் உறங்கில வென்றும், (குறு. உகூக.) மழை முதலாயின அவர் நாட்டிலில்லையோ? இருந்தால் வந்திருப்பரே யென்றும், (குறு. நிநிய.) வாடையை நோக்கி நீயெனக்கே வந்தனையோ? இவ் வண்ணமே

என்காதலரிருக்குமிடத்திற் சென்றால் அவர் என்னை நினைத்தாகினு மிருப்பரோ வென்றும், (அகம். கசுங.) துணையுடையோரை நோக்கி வாடை வந்துவிட்டதனால் "எப்பொருள் பெறினும் பிரி யன்மினோவெனச், செப்புவ ரளியர்"; துணையிலேனுதலிற் கூறு வாருமில்லை; பல்லிலை நீப்பிறக்க அடியுண்டு வருந்துவேனோ வென்றும், (அகம். உகள.) நெற்றியிற் பசலைகொண்டு யான் வருந்த இவள் நம்மால் அளிக்கத்தக்காளென்று கருதாதவர் இனி நினைக்கவேமாட்டாரோ? நினைத்தும் பெரிய வினையிடைப்பட்ட மையின் மறந்துளாரோ? (அகம். உநடு.) தோழீ, என்தனிமையில் இவ்வாடை வீசலானே இனிப்பொறேன் என்றும் பலவாறு புலம்பிவைகினார்; அகம். உகூச. இவ்வாறு வருந்தி வைகிய நாளிற் போர்முனையிற் சென்ற கீரனார் மீண்டு வந்தனர்; அவர் வருகிறாரென்பதை முன்னரே வலவிளையரா லறிந்த எயிற்றியார் பெருமகிழ் வெய்திக் காதலன் வரும்பொழுது தேர்ப்பாகற்குக் கூறுவதாக அவருள்ளக் கிடையையுந் தம்முடைய நிலையையுஞ் சேரத் தொகுத்துப் பாடினார்; அகம். உநச. பின்னர், வந்தகாதல னொடு மகிழ்ந்துறைவாராயினார். இவர் பாடல்களைப் பிற்காலத்துச் சான்றோர் துறைப்பாற்படுத்தித் தொகைநூலிற் கோத்தாரென்று கொள்க. இவர் பாடியனவாக நற்றிணையில் இரண்டு (உஅக, நகஉ) பாடல்களும், குறுந்தொகையில் மூன்றும், அகத்தில் ஐந்துமாகப் பத்துப் பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## சரு. கள்ளம் பாளனார்.

இவர்பெயர் கண்ணம் பாளனாரெனவும் பிரதிபேத முண்டு. அகத்தில் கருவூர்க் கண்ணம்பாளனாரென்றிருத்தலால் இவர் ஊர் கருவூர். 'களப்பாள்' என்று ஊர் இருத்தல்போலக் 'கள்ளம்பாள்' என்பதும் ஊராக இருக்கலாம். அகத்தில் கருவூர்க் கண்ணம்புல்லனா ரென் றொருவர்பெயர் காணப்படுகின்றது. இவர்கள் இருவரும் பாடியவெல்லாம் பாலைத்திணையா யிருததலானே இருவரும் ஒரு வரே யெனவும் ஏடெழுதுவோர் மிகையால் பெயர் பேதப்பட்ட தெனவும் ஊகிக்கலாயிற்று. கருவூர் சேரநாட்டகத்துளது. இவர் கூறிய குறைநயப்பு நுண்ணுணர்வினோரை இனிது மகிழ்விக்கும்; அகம். கஅ0. இவர் சேரமான் கோக்கோதையையும் அவனது வஞ்சிமுதூரையும் பாராட்டிக் கூறியுள்ளார்; அகம். உசுந. இவர்

பாடியனவாக நற்றிணையில் கச அ-ம் பாடலொன்றும், அகத்தில் மூன்றுமாக நாலு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## சகூ. கள்ளிக்குடிப் பூதம் புல்லனார்.

இவரது இயற்பெயர் புல்லன்; பூதன் தந்தை பெயர்போலும்; ஊர் கள்ளிக்குடி. இப்பெயர்கொண்டவூர் பலநாடுகளிற் பல விருத்தலால் இவர் ஊர் இன்னதென் றறியக்கூடாதாயினும் இவர் பாலைத்திணையையே சிறப்பித்துப் பாடியிருத்தலால் இவர் நீர்நாட்டின ரல்லரென்றுமட்டும் தெரிகின்றது. இவர் பாடியனவாக நற்றிணையில் ௲௲௲-ஆம் பாடலொன்றும், குறுந்தொகையிலொன்று மாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## சஎ. காசிபன் கீரனார்.

இவரது இயற் பெயர் கீரன். கடைச் சங்கத்திலே தலைமை பெற்றிருந்த நக்கீரரின் வேறென்பது தெரிய வனைக் கீரர்களெல்லாம் ஒவ்வோரடைமொழி கொடுக்கப்பட்டமையின், இவரும் அவ்வாறே காசிபன் கீரனாரெனப்பட்டார். காசிபனென்றதனால் இவர் காசிப கோத்திரத்தினராகிய அந்தணரென் றறியப்படும். இவர் முல்லைத்திணையைப் பாடியுள்ளார்; வம்பமாரியென்று தலைவி கருதி யாற்றுமாறு தோழி மருட்டி மழையைநோக்கிக் கூறுவதாக இவர் பாடியது மிக்க நயமுடையதாகும். இவர் பாடியது நற். உச அ-ம் பாட்டு.

## சஅ. காஞ்சிப் புலவனார்.

மாங்குடி மருதனாரென்பவர் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை நிலையாமை யறிவுறுத்தவேண்டி மதுரைக்காஞ்சி பாடியதனால் மதுரைக்காஞ்சிப் புலவனெனவும் காஞ்சிப் புலவனெனவுங் கூறப்பெறுவாராயினார்; மாங்குடி கிழாரென்பவருமிவரே. இவர் வேளாண் மரபினர். மேற்கூறிய நெடுஞ்செழியனது அவைக்களத்துப் புலவராய் அவனைப் பாடி மகிழ்வித்துவைகுவாராயினர்; புறம். உச. ஒரு காலத்துச் சேரனுஞ் சோழனும் மதுரையை முற்றியபொழுது இளைஞனாகிய நெடுஞ்செழியன் வஞ்சினங் கூறுவான் "ஓங்கிய சிறப்பி னுயர்ந்த கேள்வி,'

[பாலை.]

(க) இது, வன்பொறை எதிரழிந்த தலைமகள்
தோழிக்குச் சொல்லியது.

எ - து, பொருள்வயிற்பிரிந்தான் குறித்தபருவத்து வாராமையால் அதுகாறும் ஆற்றியிருந்து பின்பு ஆற்றாளாகிய தலைவியைத் தோழி வலிதிற்பொறுத்திருவென்றாட்குத் தலைவி குளிர்காலத்து அவர் நம்மிடத்திலிருப்பவும் நாம் வருந்தித் துயிலாததனை அறிந்தகாதலர் இப்பொழுது கைவிட்டதனால் அன்பிலர்காணென அழிந்து கூறாநிற்பது.

(உ) ஆற்றாளெனக் கவன்றதோழி
தலைமகட்குரைத்ததூஉமாம்.

எ - து, வெளிப்படை. (உரை இரண்டற்குமொக்கும்.)

கழார்க், கீரனெயிற்றியார் பாடியது.

உஅக. மாசின் மரத்த பலியுண் காக்கை
வளிபொரு நெடுஞ்சினை தளியொடு தூங்கி
வெல்போர்ச் சோழர் கழாஅர்க் கொள்ளு
நல்வகை மிகுபலிக் கொடையோ டுகுக்கு
மடங்காச் சொன்றி யம்பல் யாணர்
விடக்குடைப் பெருஞ்சோ றுள்ளுவன விருப்ப
மழையமைந் துற்ற மாலிரு ணடுநாட்
டாநம் முழைய ராகவு நாநம்
பனிக்கடு மையி னனிபெரி தழுங்கித்
துஞ்சா மாகலு மறிவோ
ரன்பிலர் தோழிநங் காத லோரே.

**உரை:**—தோழீ, நமதுகாதலர் மாசற்றமரத்திலுள்ளனவாகி மக்களிடு பலியை யுண்ணுங்காக்கை காற்றுமோதுகின்ற நெடியகிளையில் தன்மேல் விழுகின்ற மழைத்துளியுடனே அசைந்துகொண்டு வெல்லுகின்ற போரையுடைய சோழரது 'கழார்' என்னும்பதியிலே கொள்ளப்படுகின்ற நல்ல பலவகையாகமிகுத்த பலிக்கொடையொடு போகடப்படுகின்ற சொல்லிலடங்காத சோற்றுத்திரளுடனே அழகியபலவாகிய புதியஊனொடுகலந்து இடப்படுகின்ற பெரியசோற்றைத் தின்னக்கருதியனவா யிருக்குமாறு மழைபொருந்திப் பெய்தலையுற்ற மயக்கத்தையுடைய இருளின் நடுயாமத்தில் அவர் தாம் நம்மிடத்து முயங்கியிருப்பாராகவும் நாம் நமக்குண்டாகிய குளிரின்

கடுமையால் மிகப்பெரிதும் வருத்தமுற்றுத் தூங்காதிருந்தனமாதலையும் அறிந்தவர் இப்பொழுது நம்மைக் கைவிட்டகன்றனர்கண்டாய்; ஆதலின் அவர் நம்மீது சிறிதும் அன்பேயில்லாதவரல்லரோ? எ - று.

சொன்றி - சோற்றுத்திரள்.

இறைச்சி:—பலியுண்காக்கை மழையிலேநனைந்து வருந்தியும் விடக் குடைச்சோற்றைக் கருதியிருக்குமென்றது அவர் தலையளிசெய்ததால் இன்புற்றயாம் இப்பொழுது பனியாலுங்குளிராலும் வருந்தியும் இன்னு மொருகால் அவர்வந்துகூடுவரோவென்னும் ஆசையால் உயிர்துறவேமா யிராநின்றேமென்றதாம். மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல்.

[குறிஞ்சி.]

இது, சிறைப்புறமாகத் தோழி செறிப்
பறிவுறீஇ வரைவுகடாயது.

எ - து, களவொழுக்க மேற்கொண்ட தலைமகன் மறைவாகிய ஓரிடத்தில் வந்திருப்பதனைக் குறிப்பாலறிந்த தோழி தலைவியை இல்வயிற்செறித்தமை அறிவுறுத்தி வரைந்தெய்துமாறு உடன்படுத்துகின்றாள் தலைவியை நெருங்கி நீ கொண்ட இந்நோய் காதலனாலே தரப்பட்டதென்பதை யறியாத அன்னை வெறியெடுத்தலின் ஆங்கெய்திய வேலன்வார்த்தையால் இது தணியுமாயினோ மிகநன்று, அது கழிந்தது; இனி வெற்பன்பாலுற்ற நமது தொடர்பு கழிந்ததுபோலுமென் றழிந்துகூறுநிற்பது.

## நல்லூர், சிறுமேதாவியார் பாடியது.

௨௮௨. தோடமை செறிப்பி னிலங்குவளை ஞெகிழக்
கோடேந் தல்கு லவ்வரி வாட
நன்னுதற் பாய படர்மலி யருநோய்
காதலன் றந்தமை யறியா துணர்த்த
வணங்குறு கழங்கின் முதுவாய் வேலன்
கிளவியிற் றணியி னன்றுமன் சார
லகில்சுடு கானவ னுவல்சுடு கமழ்புகை
யாடுமழை மங்குலின் மறைக்கு
நாடுகெழு வெற்பனொ டமைந்தநந் தொடர்பே.

உரை:—தொகுதியாக அமைத்துச் செறித்தலையுடைய இலங்குகின்ற வளைகள் நெகிழ்ச்சியுற, பக்கம்உயர்ந்த அல்குலினுடைய அழகிய வரிகள் வாட்டமடைய, நல்ல நுதலின்கண்ணே பசலைபாயக் கவலைமிக்க நீங்குத

லரிய நோயானது நமதுகாதலனாலே தரப்பட்டதென்பதை யறியாது நம் அன்னை படிமத்தானுக்கு இவள்படும் நோயின்காரணந் தெரியவேண்டு மென்றறிவிப்ப அந்தஅறிவுவாய்ந்தவேலன் வெறிக்களத்து முருகவேளின் முன்பு இடப்பட்ட கழற்சிக்கொட்டையைக் கொண்டு ஆராய்ந்து முருகணங் கென்று அம்முருகவேளைத் துதித்தலாலே தணியப்படுமாயின் அது மிக நல்லதேயாம்: அங்ஙனம் வெறியுமெடுக்காது இல்வயிற் செறிக்கப்பட்டமை யால் இனிச் சாரலின்கண்ணே அகிலைத் தீயிட்டுக்கொளுத்துங் கானவன் ஆங்குள்ளசருகில் முதலிலே தீயிடுதலானே நறுமணம்வீசுகின்ற புகையா னது இயங்குகின்ற மழைமேகம்போல மறைக்கப்பட்ட நாடுவிளங்கிய சிலம்பனுடன் விரும்பிப்பொருந்திய நமது தொடர்ச்சி கழிந்துவிட்டது போலும்; எ - று.

உவல் - சருகு. முதுவாய்வேலன் - முதுமைவாய்ந்தவேலன் என விரித்து அறிவுவாய்ந்தவேலன் எனப்பொருள்கொள்க.

காதலன் கைவிட்டுப் பிரிந்தமையை நினைத்தலும் உடம்பு இளைத்த லானே கைவளைகழன்றமைகூறினள். பிரிதலும் பசலைபரந்து நலனைக் கெடுத்தமைதோன்ற அல்குலவ்வரிவாடவென்றான். இது பசலைபாய்தல்.

இறைச்சி:—கானவன் சுடுபுகை மேகம்போலத்தோன்றி மறைக்கு மென்றது நமது ஊழ்வினை காதலனுக்குக் களவுப்புணர்ச்சியே சிறந்ததெ னக்காட்டி அவனறிவை மயக்காநிற்குமென்றதாம். மெய்ப்பாடு - பெரு மிதம். பயன் - வரைவுகடாதல். (உ௮உ)

[நெய்தல்.]

(க) இது, பகற்குறிவந்த தலைமகனைத் தோழி வரைவுகடாயது.

எ - து, களவொழுக்கத்தே பகற்குறிவந்த தலைமகனை எதிர்கண்ட தோழி உன்சொல்லை மெய்யென்று கொண்ட இவளழகு கெடும்படி நீ இங்ஙனம் நீட்டித்துவருவது தகுமோவெனவும் உள்ளுறையால் வரைந் தெய்துகவெனவுஞ் சூழ்ந்து கூறுநிற்பது.

(உ) கடிநகர் புக்கதோழி பிற்றைஞான்று வேறுபடாது ஆற்றினையென்று சொல்லியதூஉமாம்.

எ - து, அருங்கலந்தந்து வரைந்துகொண்டு மனைவியொடு காதலன் தன்னகர் புகுந்தபின்பு இறைவியின் இல்லறநெறியை அறியுமாறு செவிலி யொடு தோழி தலைமகனது மாளிகையிலேசென்று அவனைநெருங்கி நீ காதலி வேறுபாடுறாது மணந்துநன்காற்றினையென்று மகிழ்ந்து கூறுநிற்பது மாகும்.

## மதுரை, மருதனிள நாகனுர் பாடியது.

௨அ௩. ஒண்ணுதன் மகளி ரோங்குகழிக் குற்ற
கண்ணே ரொப்பின் கமழ்நறு நெய்த
லகல்வரிச் சிறுமனை யணியுந் துறைவ
வல்லோ ராய்ந்த தொல்கவின் றொலைய
5 வின்னை யாகுத றகுமோ வோங்குதிரை
முந்நீர் மீமிசைப் பலர்தொழத் தோன்றி
யேமுற விளங்கிய சுடரினும்
வாய்மை சான்றநின் சொன்னயந் தோர்க்கே.

உரை:—ஒள்ளிய நெற்றியையுடைய நுளைச்சியர் அகன்ற கழியின் கண்ணே பறித்துவந்த மகளிர்கண்ணை நேராக ஒத்தலையுடைய மணங்கமழ் கின்ற நறியநெய்தல்மலர் அகன்ற கையாலே கோலஞ்செய்த சிறிய மனையை அலங்கரிக்குந் துறையையுடைய தலைவனே, உயர்ந்துவரும் அலை யையுடைய கடலின்மீது பலருந் தொழுமாறு தோன்றி யாவரும்மகிழ விளங்கிய ஞாயிற்றினுங்காட்டில் வாய்மைவிளங்கிய நினது சொல்லைவிரும் பிய எம்மிடத்துள்ள அறிவுடையோரால் ஆராய்ந்துகண்ட பழைய அழகு கெடும்படியாக நீ இத்தன்மையை யுடையையாயிருத்தல் தகுதியுடைய தொருகாரியமாகுமோ? ஆதலின் ஆராய்ந்து ஒன்றனைச்செய்வாயாக; எ-று.

தவிராது தோன்றிவிளங்குதலின் ஞாயிற்றை யுவமித்தார். சொல் நயந்தோர் - இடவழுவமைதி.

வரைந்தெய்தாது இங்ஙனம் நீட்டித்து அருகிவருஞ்செய்கையை யென்னும் பொருள்பட இன்னையென்ருள். புகல்புக்கார்மாட்டு வாய்மை பிறழின் மிக்கவெதமெய்துமேயென்று குறிப்பித்தாளுமாம்.

உள்ளுறை:—மகளிர் கொய்துவந்த நெய்தல் சிறுமனையை அணி செய்யுமென்றது இவளை மணந்துசென்று நினது இல்லத்தை அணிபெறச் செய்யென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுகடாதல்.

(உ) உரை:—துறைவனே, தொல்கவின் தொலையுமாறு இப்படிவரை ந்துகொள்ளாது களவினொழுகியது தகுதியாகுமோவென்றவாறு.

உள்ளுறை:—நெய்தன்மலர் சிறுமனை அழகுசெல்தல்போல இவளே நின்னில்லத்துக் கழகமைந்தவளென்பது. மெய்ப்பாடு - உவகை. பயன் - மகிழ்தல். இப்பாட்டுச்சிறுமைக்குக் கூறிய ஒன்பதடியினுங்குறைந்துளது: முதலடியில்லைப்போலும். (உஅ௩)

[பாலை.]

இது, பொருண்முடியாநின்ற தலைமகன்
ஆற்றானாகிச் சொல்லியது.

எ - து, பொருள்வயிற்சென்ற தலைமகன் தலைவியைநினைந்து ஆற்றானாகி 'என்நெஞ்சமானது தலைவிபாற் செல்லுவோமென்னாநின்றது, என் அறிவானது பொருள்முடித்துப்போவோமாதலின் அதற்குள் விரையாதே யென்கின்றது, இவ்விரண்டும் பகைகொண்டதனால் இடையிலுள்ள என்னுடம்பு அழியவேண்டுவதுதான்போலும்' என இடைச்சுரத்து அழுங்கிக் கூறாநிற்பது.

## தேய்புரிப் பழங்கயிற்றினார் பாடியது.

௨௮௪. புறந்தாழ் பிருண்ட கூந்தற் போதி
னிறம்பெறு மீரிதழ் பொலிந்த வுண்க
ணுள்ளம் பிணிக்கொண் டோள்வயி னெஞ்சஞ்
செல்ல றீர்கஞ் செல்வா மென்னுஞ்
செய்வினை முடியா தெவ்வஞ் செய்த
லெய்யா மையோ டிளிவுதலைத் தருமென
வுறுதி தூக்கத் தூங்கி யறிவே
சிறிதுநனி விரைய லென்னு மாயிடை
யொளிறேந்து மருப்பிற் களிறுமாறு பற்றிய
தேய்புரிப் பழங்கயிறு போல
வீவது கொல்லென் வருந்திய வுடம்பே.

உரை:—என் நெஞ்சமானது 'புறத்தே தாழ்ந்து இருண்டகூந்தலையும் நெய்தல்மலர்போன்ற நிறம்விளங்கிய ஈரிய இமைபொருந்திய மையுண்ட கண்ணையுமுடைய என்னுள்ளத்தைப் பிணித்துப் பற்றிக்கொண்டவளிடத்து யாம்செல்வோம், சென்று அவளுடைய இன்னாமையைத்தீர்ப்போம்' என்றுகூறாநிற்கும்: அப்பொழுது என்அறிவானது 'நாம் எடுத்த காரியத்தை முடிவுபெறப் போக்காமல் இடையில் இகழ்ந்து விட்டுவிடுதலானது அறியாமையுடனே இகழ்ச்சியையுங் கொடாநிற்குமென உறுதிப்பாட்டை ஆராய்கையாலே ஏநெஞ்சமே, நீ நிலையிலே பொருந்திநின்று சிலபொழுதளவும் மிகவிரையாதேகொள்' என்றுகூறாநிற்கும்: அவ்விரண்டும் மாறுபடுதல்கொண்டுடைமையின் அவற்றிடைநின்று வருந்துகின்ற என்னுடம்பானது விளங்கிய தலையிலே தாங்கிய கொம்பினையுடைய களிற்

றியானை ஒன்றோடொன்று மாறாகக் கைப்பற்றியீர்த்த தேய்ந்த புரியை யுடைய பழையகயிறு இற்றொழிவதுபோல அழிய வேண்டுவதுதானோ? இஃதொருகொடுமையிருந்தவாறு நன்று; எ - று.

நிறங்கிளர் நிரையிதழெனவும் பாடம்.

ஆயிடை வருந்திய உடம்பெனக் கூட்டுக. எய்த்தல் - அறிதல்; எய்யாமை - அறியாமை. செல்லல்தீர்க்கம் செல்வாமென்றது காதல்கைம்மிகல்.

'உள்ளம் அவளாலே பிணிப்புண்டமையின் அது மீண்டு அவள்பாலே கக்கருதியதாயிற்று; அறிவு பிணிப்புறாமையின் ஆராய்ச்சியின்மேலதாய் விரையவென்றது.' என இதனானே மகளிர்பான் மயங்கினார்க்கு ஆராய்ச்சி தோன்றாமையும் மயங்காதார்க்கு ஆராய்ச்சி மேம்படத்தோன்றுவதுங் கூறினான். மெய்ப்பாடு - பிறன்கட்டோன்றிய வருத்தம்பற்றிய இளிவரல். பயன் - இடைச்சுரத்தழுங்கல். (உ௪௪)

[குறிஞ்சி.]

இது, தோழி சிறப்புறமாகத் தலைமகட்குச்
சொல்லுவாளாய்த் தலைமகன்கேட்ப
அம்பலும் அலரு மாயிற்றென்று
சொல்லியது.

எ - து, அங்ஙனந்தலைமகன் கேட்குமாறு கூறுகின்றவள் குன்ற நாடன் இரவில்வருதலன்றியும் அயலார்கூறும் பழிச்சொல்லுக்கும் அகலானாகிப் பகற்பொழுதினும் புனத்தேவருகின்றனன்: அவனதுகேண்மை நல்லதில்லையென இருவகைக்குறியையுமறுத்து உள்ளுறையாலே உடன்கொண்டுசென்றாயினும் வரைந்துகொள்ளும்படி சூழ்ந்து கூறாநிற்பது.

மதுரைக், கொல்லன்வெண்ணாகனார்
பாடியது.

உ௪ரு. அரவிரை தேரு மாரிரு ணடுநா
ளிரவின் வருத லன்றியு முரவுக்கணை
வன்கைக் கானவன் வெஞ்சிலை வணக்கி
யுளமிசைத் தவிர்த்த முளவுமா னேற்றையொடு
௫ மனைவாய் ஞமலி யொருங்குபுடை யாட
வேட்டுவலம் படுத்த வுவகையன் காட்ட
நடுகாற் குரம்பைத்தன் குடிவயிற் பெயருங்

குன்ற நாடன் கேண்மை நமக்கே
நன்றால் வாழி தோழி யென்றும்
மயலோ ரம்பலி னகலான்
பகலின் வரூஉ மெறிபுனத் தானே.

உரை:—தோழீ, வாழ்வாயாக; திண்ணிய கையையுடைய கானவன் தனது வெய்ய வில்லைவளைத்து வலிய கணையையெய்து நெஞ்சிலேபாய்த்திக் கொன்ற முட்பன்றியேற்றையைக் கைக்கொண்டு வேட்டையிலே தான்பெற்ற வென்றியாலாய உவகையுடையவனாகி மனையகத்துள்ள நாய்களெல்லாம் ஒருசேரப் பக்கத்திலேவந்து குரைத்து விளையாடக் காட்டகத்துள்ள நட்டகாலிலே கைசேர்த்துப் பிணித்த தானிருக்குங் குடிசையுடைய சேரியின்கண்ணே செல்லாநிற்குங் குன்றநாடன் பாம்புகள் தமக்குவேண்டிய இரையைத்தேடி யுழலாநின்ற இயங்குதற்கரிய இருள்மிக்க இரவு நடுயாமத்தில் நம்பால் வருவதல்லாமலும் எப்பொழுதும் அயலவர்கூறும் பழிச்சொல்லைக் கேட்டும் அகன்றுபோகானாகி வெட்டியுழுதுவிதைத்த தினைப்புனத்தின்கண்ணே பகற்பொழுதினும் வாராநின்றான்: ஆதலின் அவனுடைய நட்பானது நமக்குநல்லதோ? நல்லதன்றாயிற்றுக்காண்; எ - று.

நன்று - நல்லதன்று என்னும் பொருள்தோன்ற எடுத்தலோசையாற் கொள்க. இஃது, அவன்புணர்வுமறுத்தல்.

உள்ளுறை:—கானவன் எய்துபெற்ற முளவுமானேற்றையொடு உவகையனாய் நாய்கள் மனையகத்து எதிரேபோந்து குரைத்து மகிழாநிற்பக் குடிவயிற்பெயருமென்றது தலைமகன்தான் களவொழுக்கத்துப்பெற்ற தலைவியை இரவில் உடன்கொண்டுசென்று தன்னூர்வயிற்புகுந்து தன்மனையின்கணுள்ள தமர் மகிழாநிற்ப மணம்புணர்வானாக வென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுகடாதல். (உஅரு)

[பாலை.]

இது, பிரிவிடைமெலிந்த தலைமகளைத்
தோழி வற்புறுத்தது.

எ - து, வணிகர்தலைமகன் பொருள்வயிற் பிரிதலால் வருந்திய தலைவியைத் தோழி நெருங்கி அவர் பிரிதலால் இறந்துபடுவேனென்று வருந்தாதேகொள்; நட்பாளர்க்கு ஆக்கமும் நின்தோளுக்கு அணியுங் கொண்டுவரவேண்டியன்றோ அவர் சென்றதென வலியுறுத்தி ஆற்றுமாறு கூறாநிற்பது.

துறைக்குறுமாவிற்,
பாலங்கொற்றனார் பாடியது.

உ௮௬. ஊச லொண்குழை யுடைவியத் தன்ன
அத்தக் குமிழி னயிதழ் மலரி
கல்லென வரிக்கும் புல்லென் குன்றஞ்
சென்றோர் மன்ற செலீஇயரென் னுயிரெனப்
புனையிழை நெகிழ விம்மி நொந்துநொந்
தினைத லான்றிசி னயிழை நினையி
னட்டோ ராக்கம் வேண்டியு மொட்டிய
நின்றோ ளணிபெற வரற்கு
மன்றோ தோழியவர் சென்ற திறமே.

உரை:—ஆராய்ந்தணிந்த இழையையுடையாய், தோழீ, 'உடைமரங்கள் மிக்க நெறியின்கண்ணே மகளிரின்ஒள்ளிய குண்டலத்திற்கொளுவிய ஊசல்போன்ற மலைநெறியிலுள்ள குமிழமரத்தின் அழகிய இதழையுடைய மலர் கல்லென்னுமொலியொடு கோலஞ்செய்தாற்போல உதிராநிற்கும் பொலிவழிந்த குன்றத்து எமது காதலர் சென்றனராதலால் திண்ணமாக இனி என்னுயிர் சென்றொழிவதாக' என்று நீ அணிந்த கலன்கள் கழன்று விழும்படி விம்மியழுதும்மிகநொந்து வருந்துகின்றதனைச் சிறிது பொறுப்பாயாக: கருதுங்காலைத் தம்மைநட்புக்கொண்டவர்தாம் செல்வமடையவேண்டியதற்காகவும், அடைக்கலமாகப் புகுந்த நின்னுடைய தோள்கள் நல்ல கலன்களை அணியப்பெறுவதற்காகவு மன்றோ அவர்சென்றதன்மையாகும்.

உடை - உடைமரம். வியம் - வழி. உடைவியத்துக் கற்பாறையிலே குழையூசலன்ன அலரி கோலஞ்செய்யுமென மாறிக்கூட்டுக. ஊசல்போறவின் ஊசலென்றார். இக்காலத்துச் சிமிக்கியெனவுங் குடைக்கடுக்கனெனவுங் கூறுப; குமிழம்பூ அங்ஙனமேயிருப்பதுகண்டு தெளிக. பெறவரல் - ஒருசொல். அணிபெறுதற்கெனவே தலைவன் வணிகனனமைதெளிக.

கல்லறை குமிழமலர் வரிக்குமென்றது சென்றோர்மீண்டு நின்மாட்டு அருங்கலம் பலகொணர்ந்து அலங்கரிப்பரென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - தலைமகளை ஆற்றுவித்தல். (உ௮௬)

[நெய்தல்.]

இது, காப்புமிகுதிக்கண் ஆற்றாளாகிய
தலைமகள் சொல்லியது.

எ - து, இல்வயிற்செறித்துக் காவல்செய்யப்படுதலாற் புறத்தே போதற்கியலாது ஆற்றாமைமிக்க தலைவி முன்பு தலைவன் நம்பால் வந்த

பொழுதெல்லாம் அஞ்சாத என்னெஞ்சம் இப்பொழுது இல்வயிற்செறித் தலால் இரவிலே புள்ளொலி கேட்குந்தோறும் தலைவனது தேரின் மணிக் குரலோவென்றஞ்சித்துயில் கொண்டிலதென நொந்து கூறுநிற்பது.

## உலோச்சனார் பாடியது.

உ அஎ. விசும்புறழ் புரிசை வெம்ப முற்றிப்
பைங்கண் யானை வேந்துபுறத் திறுத்த
நல்லெயி லுடையோ ருடைய மென்னும்
பெருந்தகை மறவன் போலக் கொடுங்கழிப்
பாசடை நெய்தற் பனிநீர்ச் சேர்ப்ப
னுமை முதலை நடுங்குபகை யஞ்சான்
காமம் பெருமையின் வந்த ஞான்றை
யருகா தாகிய வன்க ணெஞ்ச
நள்ளென் கங்குற் புள்ளொலி கேட்டொறுந்
தேர்மணித் தெள்ளிசை கொல்லென
வூர்மடி கங்குலுந் துயின்மறந் ததுவே.

உரை:—வளைந்த கழியின்கண்ணே பசிய இலைகளையுடைய நெய்தல் மிக்க குளிர்ந்தநீரையுடைய கொண்கன், அச்சஞ்செய்கின்ற முதலையின் நடுக்கமுறுத்தும் பகைமைக்கும் அஞ்சானாகிக் காமமிகுதியால் இங்கு வந்த பொழுது விசும்பிலே நீண்டுயர்ந்த மதிலை உள்ளிருப்பவர் நடுங்கும்படி முற்றுகைசெய்து பசியகண்ணையுடைய யானைப்படையொடு பகையரசன் அதன் புறத்தே தங்கப்பெற்றதனால் அப்பகையரசனை உள்ளேபுகுதவிடாதபடி நல்லமதில்காவலுடையாரை யாம் பெற்றுடையோமென்று கருதியிருக் கின்ற பெருந்தன்மையுடைய உள்ளடைபட்டிருந்த வீரனைப்போலக் கெடாத வன்கண்மையுடைய என்னெஞ்சமானது இப்பொழுது செறிந்த இருளை யுடைய நடுயாமத்திலே பறவையொலிப்பதைக் கேட்குந்தோறும் நமது காதலன் ஊர்ந்துவருகின்ற தேரிலேகட்டிய மணியின் தெளிந்த ஓசையோ வென்று ஊராரெல்லாரும் உறங்குகின்ற இராப்பொழுதினும் துயில்கொள் வதனை மறந்துளதாயிராநின்றது; எ - று.

தான் காவலுட்பட்டிருந்தமையை முற்றுகையுட்பட்ட வீரனோடுவமித் தாள். அவ்வீரன் எயில்காவலரை யுடையேமென்றிருத்தல்போல யானுந் தலையளிசெய்யுந் தலைவனையுடையேனாயிருந்தேன் அது கழிந்ததென்பாள் இப்பொழுது காவன்மிகுதியாலும் அவன்வாராமையாலும் புள்ளொலி ஒருந் தன்மையதாகியதென்றாள். புள்ளொலிகேட்டலென்றது எதிர்பெய்துபரி தல். துயின்மறந்ததென்றது கண்டுயின்மறுத்தல். ஏனைம்மெய்ப்பாடு - பிறன்கட்டோன்றிய வருத்தம்பற்றிய இளிவரல். பயன் - அயாவுயிர்த்தல்.

## [குறிஞ்சி.]

### இது, தோழி சிறைப்புறமாகத் தலைமகட்குரைப்பாளாய் வெறியறிவுறீஇ வரைவுகடாயது.

எ - து, சிறைப்புறம்வந்த தலைமகன் கேட்டு விரைய வரையுமாறு தோழி தலைவியைநெருங்கி நாடன்பிரிவினாலே பசலைதோன்றியதறிந்த அன்னை கட்டுவைத்துக் கேட்டால் அந்தக் கட்டுக்குறியானது முன்பு யாம் கிளியோப்பிப் புனங்காவல்செய்யச் சென்றிருந்தும் அதனையறியாது நெடியமுருகவேள் அணங்கியதென்று சொல்லுமோவென அழிந்து கூறா நிற்பது.

### குளம்பனார் பாடியது.

௨௮௮. அருவி யார்க்கு மணங்குடை நெடுங்கோட்டு
ஞாங்க ரிளவெயி லுணீஇய வோங்குசினைப்
பீலி மஞ்ஞை பெடையோ டாடுங்
குன்ற நாடன் பிரிவிற் சென்று
நன்னுதற் பரந்த பசலைகண் டன்னை
செம்முது பெண்டிரொடு நென்முன் னிறீஇக்
கட்டிற் கேட்கு மாயின் வெற்பி
லேனற் செந்தினைப் பாலார் கொழுங்குரற்
குறுங்கிளி கடிகஞ் சென்றுமிந்
நெடுவே ளணங்கிற் றென்னுங்கொ லதுவே.

உரை:—உயர்ந்த மரக்கிளையிலுள்ள பீலியையுடைய மயில் காலையில் விரிந்த இளவெயில்காயவேண்டி அருவியொலிக்கின்ற அச்சமுடைய நெடிய கொடுமுடியின் பக்கத்திலே தன் பெடையொடு விளையாடாநிற்கும் மலைநாடன் நம்மைப் பிரிதலினாலே சென்று நல்ல நினது நுதலிலேபரந்த பசலையைநோக்கி நமது அன்னை சேரியிலுள்ள செம்மையாகிய முதுமையுடைய கட்டுவிச்சி முதலாயினோருடனே இல்லகம்புகுந்து முன்னர் முறத்தில் நெல்லைப்பரப்பிக் கட்டுவைத்து நம்மை எதிரில்நிறுத்திக் குறிகேட்குமாயின் அக் கட்டுக்குறியானது,—இப்பொழுது மலையிடத்திலுள்ள ஏனலாகிய சிவந்த தினையின் பால்நிரம்பிய கொழுவிய கதிர்களைக் கொய்து கொண்டுபோகுங் கிளிகளை வெருட்டுவேமாகிச் சென்றிருந்தும் அதனையறியாது இவள் இந்தநெடிய முருகவேளிருக்குமிடத் தருகுசென்றதனால் முருகவேள் அணங்கியதென்று கூறாநிற்குமோ? எ - று.

ஏனலாகியதினை - இருபெயரொட்டு.

கட்டு - சேரியின் முதுபெண்டாகிக் குறிசொல்லுமாதரை மனையகத்துக் கொணர்ந்துவைத்து முறத்திலே பிடிநெல்லையிட்டு எதிரே தலைமகளை நிறுத்தித் தெய்வத்துக்குப் பிரப்பிட்டு வழிபாடுசெய்து அந்நெல்லை நந்நான்காக எண்ணி எஞ்சியவை ஒன்றிரண்டு மூன்றளவும் முருகணங்கெனவும் நான்காயின் பிறிதொரு நோயெனவுங் கூறப்படுவது. முருகணங்கென்று கூறின் உடனே வேலனை (முருகனுக்குப் பூசைநடத்தும் பூசாரியை) அழைத்து வெறிக்களந்திருத்தி முருகவேளுக்குச் சிறப்பெடுத்து ஆண்டுக் கழங்குக் குறிபார்ப்பது. அதனை நேர்ந்துழி இந்நூலுட் கூறப்படுவதறிக.

உள்ளுறை:—இளவெயிலுண்ணவேண்டி மயில் பெடையோடு கோட்டின்பக்கஞ்சென்று ஆங்கு ஆடுமென்றது காமவின்பந்துய்த்து இல்லறம் நிகழ்த்தவேண்டித் தலைமகன் தலைமகளைக் கொண்டுதலைக்கழிந்து மணந்து வைகுவானாகவென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவு கடாதல். (௨௮௮)

[முல்லை.]

இது, பிரிவிடைப் பருவங்கண்டு சொல்லியது.

எ - து, பிரிந்த தலைமகன் குறித்தபருவத்து வாராமையால் வருந்திய தலைவி அவர் சொல்லிய சொற்பிழையார்; அதன்முன் வானம் கார்காலத்தைச் செய்துவிட்டதாதலின் அவரால் அளித்தற்குரிய யான் இப்பொழுது அருளப்படாம லிருக்கின்றேனென்று நொந்து கூறுநிற்பது.

மருங்கூர்ப்பட்டினத்துச்,
சேந்தன்குமரனார் பாடியது.

௨௮௯. அம்ம வாழி தோழி காதலர்
நிலம்புடை பெயர்வ தாயினுங் கூறிய
சொற்புடை பெயர்தலோ விலரே வான
நளிகடன் முகந்து செறிதக விருளிக்
கனைபெயல் பொழிந்து கடுங்குரல் பயிற்றிக்
கார்செய் தென்னுழை யதுவே யாயிடைக்
கொல்லைக் கோவல ரெல்லி மாட்டிய
பெருமா வோடிப் போல
வருளிலே னம்ம வளியேன் யானே.

உரை:—தோழீ, வாழி; யான் கூறுகின்றதனைக் கேட்பாயாக; இந்நிலம் தன்னிலையினின்று பெயர்வதாயிருந்தாலும் நமது காதலர் தாம் கூறிய சொல்லை அதனிலைமையினின்றும் பெயர்த்துக்கூறுபவரல்லர்: ஆதலிற்

குறித்தபருவத்து வருவர்: அதன்முன் மேகமானது நெருங்கிய கடனீரை முகந்து செறிவுபொருந்த இருண்டு மிக்க மழையைப்பெய்து கடிய குரலைக் காட்டி யிடித்துக் கார்காலத்தைச் செய்து துன்புறுத்துதற்கு என்மாட்டு அமைந்திராநின்றது: இப்பொழுது அளிக்கத்தக்க தகுதியுடையேனாகிய யான் அங்கே கொல்லையிற் கோவலர்கள் இரவில் எரிகொளுத்திய வெட்டுண்ட பெருமரத்தினது வேரடிக்கட்டையைப்போல காமநோய் கனற்றலானே அவரால் அருள்செய்யப்பெறேனா யிராநின்றேன்; எ - று.

காட்டின்கட் கொல்லையிற் கோவலர் கொளுத்திய வேர்க்கட்டை அவிப்பாரின்றித் தானேவெந்து தணியுமன்றே அப்படிப்போல அருள்செய்யுந் தலைவரின்றி யான் காமத்தீயால் அழிந்தொழியாநின்றேனென உவமையொடு பொருத்திக்காண்க. மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல்.

[மருதம்.]

(க.) இது, பரத்தை விறலிமேல் வைத்துத்
தலைமகளை நெருங்கிச் சொல்லியது.

எ - து, காமக்கிழத்தி விறலியை நோக்கிச் சொல்லுவாள்போலக் கூறித் தலைவியைப் புலவி தணிக்கின்றாள், ஊரனது தொடர்பை விரும்பினையாயின் என் சொல்லைக் கொள்ளுவையாக: நின் தகுதிக்கு இப்புலவி தகாதுகாண்: அவனை வண்டென்பதன்றி மகனென்னாராதலிற் புலவாதே கொள்ளென நயந்து கூறுநிற்பது.

(உ.) பரத்தையிற் பிரிய வாயிலாய்ப்புக்க பாணன்
கேட்பத் தோழி சொல்லியதூஉமாம்.

எ - து, வெளிப்படை.

## மதுரை, மருதனிளநாகனார் பாடியது.

உ௯0. வயல்வெள் ளாம்பற் சூடுதரு புதுப்பூக்
கன்றுடைப் புனிற்றா தின்ற மிச்சில்
லோய்விடு நடைப்பக டாரு மூரன்
றொடர்புநீ வெஃகினை யாயி னென்சொற்
கொள்ளன் மாதோ முள்ளெயிற் றோயே
நீயே பெருநலத் தகையே யவனே
நெடுநீர்ப் பொய்கை நடுநா ளெய்தித்
தண்கமழ் புதுமல ரூதும்
வண்டென மொழிப மகனென் னாரே.

உரை:—முட்போன்ற கூரிய பற்களையுடையாய், வயலில் மன்னர் அறக்கும் கதிரோடு அறுபட்டு அரிச்சூட்டோடு களத்திற்கொணர்ந்து

போகடப்பட்ட வெளிய ஆம்பலின் அப்பொழுது மலர்ந்த புதியபூ, கன்றை அணிமையி லீன்றுடைய பசுவானது தின்று எஞ்சிய மிச்சிலே உழுதுவிட்ட ஓய்ந்த நடையையுடைய பகடு தின்றுநிற்கும் ஊரனுடன் கூட்டம் நெடுங் காலம் நிகழ்த்துதலை விரும்பினையாதலின் 'அவள் அவனொடு கட்டில்வரை யெய்தினாள்' என்று ஊரார் கூறுகின்ற சொல்லைக்கொண்டு என்னைப்போல வேறுபட்டுக் கொள்ளாதே: இனி என் வார்த்தையைக்கேட்டல் நினக்கு விருப்பமோ? விருப்பமாயின் யான் கூறுகின்றதனைக் கொள்வாயாக: அது தான் யாதோவெனில் பெரிய இளமையும் தகுதிப்பாடுமுடையை யாத லால் நீ வேறுபட்டுக்கொள்வது நின் இளமைக்கும் எழிலுக்கும் ஏலாதது காண்: அவனை நெடிய நீரையுடைய பொய்கையில் நடுயாமத்திலே தண்ணி தாய் நறுமணங்கமழும் புதிய மலரிலேசென்று தேனுண்ணும் வண்டெனச் சொல்லுவரல்லாமல் நல்ல ஆண்மகனென யாருங்கூறார்: ஆதலின் அவனைப் புலவாதேகொள்; எ - று.

நள்ளிரவிலே சென்று புதிய பரத்தையை விரும்பித் துய்ப்பவனென் பாள் நடுயாமத்து விரியும்பூவை யுண்ணுகின்ற வண்டெனக்கூறினாள்.

உள்ளுறை:—புனிற்று தின்றமிச்சிலே உழுதுவிடுபகடு சென்று தின் றாற்போல நீ இளமைச்செவ்வியெல்லாம் அவனை நுகர்ந்து புதல்வனைப் பயந்த பின்னர் நீ உண்ட மிச்சில்போன்ற அவனைப் பிறர் நுகர்கின்றனர்: அது நினக்கு இழுக்கன்று என்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - ஊடல்தணித்தல்.

(உ.) உரை:—முள்ளெயிற்றோய், நீ ஊரனது தொடர்ச்சியை விரும் பின் என் சொல்லை ஏற்றுக்கொள்ளவேண்டா, கொள்ளின் நீ மிக்க அழ குடையையாயிருந்தும் அவனை வண்டென்பதன்றி ஆண்மகனென்னாராத லின் அவன் தொடர்பு என்ன பயனுடையதுகாண்? எ - று. மெய்ப்பாடு - வெகுளி. பயன் - வாயின் மறுத்தல். (உ௬0)

[நெய்தல்.]

இது, வாயிலாகப் புக்க பாணற்குத் தோழி
தலைமகளது குறிப்பறிந்து
நெருங்கிச் சொல்லியது.

எ - து, பரத்தையிற்பிரிந்த தலைமகன் விடுப்பவந்த பாணனைத் தோழி நோக்கித் தலைவன்பால் இறைமகள் வேட்கையுடையாளென்னுங் குறிப்ப றிந்தனளாதலின் அதற்கேற்கும்படி கூறுவாளாகிப் பாணனே, இவள்தான் நலமிழந்துவருந்துவதனை நீ கண்ணாலே கண்டவாறு துறைவ னுள்ளங் கொள்ளமொழிந்தாயல்லையே இது தகுதியோவென நொந்து கூறுகிற்பது.

## கபிலர் பாடியது.

உ௯௧. நீர்பெயர்ந்து மாறிய செறிசேற் றள்ள
னெய்த்தலைக் கொழுமீ னருந்த வினக்குருகு
குப்பை வெண்மண லேறி யரைச
ரொண்படைத் தொகுதியி னிலங்கித் தோன்றுந்
தண்பெரும் பௌவநீர்த் துறைவற்கு நீயுங்
கண்டாங் குரையாய் குணமோ பாண
மாயிரு முள்ளூர் மன்னன் மாவூர்ந்
தெல்லித் தரீஇய வினநிரைப்
பல்லான் கிழவரி னழிந்தவிவ ணலனே.

உரை:—பாணனே மிக்க பெரிய முள்ளூர் மன்னவனாகிய மலையமான் திருமுடிக்காரி பரியேறிச்சென்று இராப்பொழுதில் அடித்துக்கொண்டு வரப்பட்ட கூட்டமாகிய பலவாய பசுவினிரைக்குரியவர் அவனோடெதிர் நின்று போர்முனையில் அழிந்தாற்போல அழிந்துபோகிய இவளது நலத்தை நீ கண்கூடாகக் கண்டபடி,—நீர் தன்னிலையிலிருந்தோடி வற்றிய அள்ளற் சேற்றின்கணுள்ள நிணமிக்க தலையையுடைய கொழுத்தமீனை அருந்த வேண்டி நாரையினம் குவிந்த வெளிய மணன்மேட்டி லேறியிருந்து அரச ரது ஒள்ளிய காலாட்படையின் கூட்டம்போல விளங்கித் தோன்றுநிற்கும் தண்ணிய பெரிய கடனீர்த்துறையையுடைய காதலனுக்கு உரைத்தாயில் லையே: அங்ஙனங் கூறுதது நினக்கு இயல்பாகுமோ? கூறியிருந்தால் முன் னரே அவன் வந்து கூடித் தலையளிசெய்திருப்பன்: நீ உள்ளவாறு கூறா மையின் அவனும் வந்திலன்: இவளது நலனும் அழிந்ததுகாண்; எ - று.

காலாட்படை சென்னியில் வெள்ளாடை சூடிச் செல்லுதல் அக்கால வழக்காதலின் வெளிய நாரையிருத்தற்கு உவமித்தனர்போலும். நிணத்தை யுருக்க நெய்யாமாதலின் நெய்த்தலையென்றதாம்.

உள்ளுறை:—மீனருந்தவேண்டிக் கூட்டமாகக் குருகுகளிருத்தல் போல இறைமகன்பால் கிடைக்கப்பெறுவனவற்றைத் தெட்டிக்கொள்ளு தற்கு விறலிமுதலானவரொடு கூட்டமாகவிருக்கின்றீர்; குருகுகள் படை போன்றிருப்பினும் படையாகாதன்றே அங்ஙனம் நீயிர் வாயில்களாகுந் தன்மையீர்போலிருந்தும் அது செய்யும் வன்மையுடையீரல்லீரென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - தலைவனைத் தலைவியொடு கூட்டுவித்தல்.

[குறிஞ்சி.]

இஃது, இரவுக்குறி மறுத்தது.

எ - து, களவொழுக்கத்து இரவுக்குறிவருந் தலைவனைத் தோழி நெரு ங்கி ஐயனே, கரைகளில் யானைபொருதலால் இடிந்து பொன்முதலியன

மின்னுநிற்கும்: கான்யாற்றின்கண்ணே முதலை யியங்காநிற்கும்: இத்தகைய நெறியின்ஏதம்நினையாது இராப்பொழுதில் நீ வருதலாலே தலைவி உயிர் வாழாள்காணென ' இரவுக்குறிமறுத்து வரைவுகடாவாநிற்பது.

## நல்வேட்டனார் பாடியது.

௨௯௨. நெடுங்க ணாரத் தலங்குசினை வலந்த
பசுங்கே ழிலைய நறுங்கொடித் தமாலந்
தீந்தேன் கொள்பவர் வாங்குபு பரியும்
யாணர் வைப்பிற் கான மென்னாய்
௫ களிறுபொரக் கரைந்த கயவாய்க் குண்டுகரை
யொளிறுவான் பளிங்கொடு செம்பொன் மின்னுங்
கருங்கற் கான்யாற் றருஞ்சுழி வழங்குங்
கராஅம் பேணா யிரவரின்
வாழே னைய மைகூர் பனியே.

உரை:—ஐயனே, நெடிய கணுக்களையுடைய சந்தனமரத்தின் அசைகின்ற கிளையிலே சுற்றிய பசிய நிறம்பொருந்திய இலையுடைய நறிய தமாலக் கொடியை இனிய தேனெடுக்கும் வேடர் வளைத்து அறுத்துக்கொண்டு செல்லாநிற்கும் புதுவருவாய் மிக்க இடத்தினையுடைய கானமென்று கருதாயாகி,—யானைகள் ஒன்றோடொன்று போர்செய்தலாலே இடிந்தொழிந்த பெரியபள்ளங்கள் பொருந்திய ஆழ்ந்த கரையிடமெல்லாம் விளங்கிய வெள்ளியபளிங்குக்கற்களும் சிவந்த பொன்னும் மின்னுநிற்கும்: கரிய கற்பாறையிலோடுகின்ற கான்யாற்றில் நீந்துதற்கரிய நீர்ச்சுழியையுடைய இடந்தோறும் முதலைகள் இயங்காநிற்கும்: இத்தகைய ஏதங்களையும் நினையாயாகி இராவின்கண்ணே நீ இங்குவரின் யான் இனி உயிர்வாழ்ந்திரேன்: இந்த இருள் நிரம்பிய பனிக்காலத்திலே தனித்தும் உயிர்வாழ்ந்திரேன்: ஆதலின் இதனை ஆராய்ந்து ஒன்றனை இன்னே செய்வாயாக; எ - று.

வாழேனென்பதை இரண்டிடத்துங் கூட்டுக. தலைவி கூற்றைத் தோழி கொண்டு கூறியது.

நறுங்கொடி யென்றிரங்காது அறுப்பவரென்றதனால் நீ அரசகுமாரனென் றிரங்காது ஊறுசெய்பவரென்பது குறிப்பித்தாள். வாழேனென அவனது நெறிவருமேதம்நினைந்து கவன்றதுபோலவுங் கூறினமையின் வரைந்து பிரியாதுறைகவென்றாளுமாம். இஃது அழிவில்கூட்டத் தவன் புணர்வுமறுத்தல்.

இறைச்சி:—தேன்கொள்பவர் சந்தனமரத்திலே சுற்றிய கொடியை யறுப்பரென்றதனால் தலைவியினது நலனை நுகரவருகின்ற நீ இரவில் வருத

லானே கவலுகின்ற அவளது கவலை நீங்குமாறு வரைந்தெய்துகவென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - இரவுக்குறிமறுத்துவரைவுகடாதல். (உ௯௨)

[பாலை.]

(க.) இது, தாய் மனைமருண்டு சொல்லியது.

எ - து, களவினொழுகுந் தலைமகன் தலைவியை உடன்கொண்டு சென்றமை செவிலியாலறிந்த ஈன்றதாய் வருந்தி எம் புதல்வியுடனிருந்த தோழியரை யாம் காணுந்தோறும் நடுங்கி நொந்தொழிதல்போல எம்மகளை யுடன்கொண்டகன்ற காளையாவானை யீன்றதாயும் நடுங்கி நொந்தழிவாளாக வென்று தன் மனையின்கண்ணே யிருந்து மருண்டு கூறாநிற்பது.

(உ.) அவரிடத்தாரைக்கண்டு சொல்லியதுஉமாம்.

எ - து, தலைவனைச் சார்ந்தவரைக்கண்டு சொல்லியதுமாகும். (உரை இரண்டற்குமொக்கும்.)

கயமனார் பாடியது.

உ௯௩. மணிக்குரா னொச்சித் தெரியல் சூடிப்
பலிக ளார்கைப் பார்முது குயவ
னிடுபலி நுவலு மகன்றலை மன்றத்து
விழவுத்தலைக் கொண்ட பழவிறன் மூதூர்ப்
5 பூங்க ணுயங் காண்டொறு மெம்போற்
பெருவிதுப் புறுக மாதோ வெம்மிற்
பொம்ம லோதியைத் தன்மொழிக் கொளீஇக்
கொண்டுடன் போக வலித்த
வன்கட் காளையை யீன்ற தாயே.

உரை:—நீலமணிபோலும் பூங்கொத்தினையுடைய நொச்சிமாலையைச் சூடிப் பலிகளிடுதற்கு அமைந்த கையையுடைய பரிய முதிய குயவன் தான் இடப்படும் பலியை யுண்ணுதற்கு அணங்குகளையும் காக்கைகளையும் அழையாநிற்கும் அகன்ற இடத்தையுடைய மன்றத்தின்கண்ணே திருவிழாச்செய்தலை மேற்கொண்ட பழைமையான வெற்றியையுடைய இம்மூதூரிடத்தில் எம்புதல்வியுடன் விளையாடும் நெய்தன்மலர்போலுங் கண்ணையுடைய தோழியரைக் காணும்போதெல்லாம் யாம் பெரிய நடுக்கமுற்றுத் துன்பப்படுவதுபோல,—எம் மனையகத்திருந்த பொலிவுபெற்ற கூந்தலையுடைய எம் புதல்வியை மருட்டிப் பலவாய பொய்ம்மொழிகூறித் தன் சொற்படியொழுகச்செய்து தன்னுடன் அழைத்துக்கொண்டு சென்ற வன்கண்மையுடைய காளையாவானை யீன்றதாயும் இத்தகைய கொடிய புதல்வனை யீன்றதனாலே அவள் பெரிய நடுக்கமுற்றுத் துன்பமடைந் தொழிவாளாக; எ - று.

விதுப்பு - நடுக்கம். பழவிறல் - பழையவெற்றி. பொம்மல் - பொலிவு. இங்ஙனங்கூறியதனால் தலைவனுக்குத்தாயும் தலைவிக்குத்தாயுமாவார் ஒருவரையொருவர் கடிந்துகூறுதல் பண்டைக்காலமுதல் தமிழ்நாட்டில் நிகழும் வழக்குப்போலும். மெய்ப்பாடு - வெகுளி. பயன் - ஆற்றுதல். (உ௯௩)

[குறிஞ்சி.]

இது, மணமனை யுட்புக்க தோழி தலைமகளது கவின்கண்டு சொல்லியது.

எ - து, கொண்டுதலைக்கழிந்த தலைமகன் தன்னகம்புகுந்து தலைமகளை மணஞ்செய்துகொண்டதறிந்த தோழி அவன் மாளிகையின்கண்ணே சென்று தலைவியின் புதிய அழகுகண்டு வியந்து தலைவனது மார்பு முன்பு நோயும் பின்பு இன்பமுமாயிராநின்றது, இது பொய்ம்மையன்றென மகிழ்ந்து கூறாநிற்பது.

புதுக்கயத்து, வண்ணக்கன் கம்பூர்கிழான் பாடியது.

உ௯௪. தீயும் வளியும் விசும்புபயந் தாங்கு
நோயு மின்பமு மாகின்று மாதோ
மாய மன்று தோழி வேய்பயின்
றெருவை நீடிய பெருவரை யகந்தொறுந்
௫ தொன்றுறை துப்பொடு முரண்மிகச் சினைஇக்
கொன்ற யானைக் கோடுகண் டன்ன
செம்புடைக் கொழுமுகை யவிழ்ந்த காந்தள்
சிலம்புடன் கமழுஞ் சார
லிலங்குமலை நாடன் மலர்ந்த மார்பே.

உரை:—தோழீ, மூங்கில் நெருங்கிக் கொறுக்கச்சி முளைத்துப் பரவிய பெரிய மலையிடமெல்லாம் பழைமையாயுற்ற அறிவுடனே வலிமையு மிகுதலாலே சினங்கொண்டு புலியைக்கொன்ற யானையின் தந்தத்தைக்கண்டாற்போன்ற செவ்விய புறத்தையுடைய கொழுவிய அரும்பவிழ்ந்த காந்தள் சிலம்பிடமெல்லாம் மணங்கமழுஞ் சாரலையுடைய இலங்குகின்ற மலைநாடனது அகன்ற மார்பானது, ஆற்றற்கரிய தீயையும் ஆற்றுதற்கினிய காற்றையும் ஆகாயந்தான் பெற்றதுபோலக் களவுக்காலத்து அணித்தாகி எப்பொழுது மில்லாமையால் நோய்செய்யுந் தன்மையும் இப்பொழுது வரைந்துகொண்டு கவவுக்கைநெகிழாது அணைத்து முயங்கியிருத்தலானே இன்பமாந் தன்மையுமாகி யிராநின்றது: இது பொய்ம்மையெனப்படுவதன்று: மெய்ம்மையேயாகும்; எ - று.

தொண்டு என்பதும் பாடம்.

அகந்தோறும் அவிழ்ந்த காந்தளென்க. புலியின் இரத்தந்தோய்ந்த கோடாதலின் செம்முகைக்கு உவமித்தார். இது, நலன் நிலைக்களமாகச் சினையொடு சினைவந்த உருவுவமம். பிரிந்துறையும்பொழுது தீயாலே தெறப்படுவதுபோலத் தலைவி வருந்துதலின் மார்பு தீயொத்தநோயைப் பயந்ததெனவும் வரைந்து பிரியாதுறையும்பொழுது அவ்வெப்பந்தீரக் காற்றுவீசி யின்பஞ்செய்வதுபோல மார்பு காற்றொத்த இன்பத்தைப் பயந்ததெனவுங் கூறினாளாயிற்று. இது, மறைந்தவையுரைத்தல்.

உள்ளுறை:—காந்தள் சிலம்பிடமெங்குங் கமழுமென்றது தலைவனது அன்பு தலைவியின் இல்லகத்தார் யார்க்கும் மகிழ்ச்சியளிக்கின்றதென்றதாம். மெய்ப்பாடு - உவகை. பயன் - மகிழ்தல். (உ௯௪)

[நெய்தல்.]

(க.) இது, தோழி செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

எ - து, தோழி தலைமகனை நெருங்கி எமது தலைவியின் களவொழுக்கத்தினை அன்னையறிந்து அவளை இல்வயிற்செறித்தனள்: இனிக் களவினியலாமையால் யாம் எந்நலனழியச் செல்லாநிற்பேம்; நீ வாழியவெனநொந்து கூறுநிற்பது.

(உ.) சிறைப்புறமுமாம்.

எ - து, தலைவன் சிறைப்புறத்தானாக அவன் கேட்பக் கூறியதுமாகும். (உரை இரண்டற்குமொக்கும்.)

## ஔவையார் பாடியது.

உ௯ரு. முரிந்த சிலம்பி னெரிந்த வள்ளியிற்
புறனழிந் தொலிவருந் தாழிருங் கூந்த
லாயமு மழுங்கின்று யாயுமஃ தறிந்தன
ளருங்கடி யயர்ந்தனள் காப்பே யெந்தை
வேறுபன் னாட்டிற் கால்தர வந்த
பலவினை நாவாய் தோன்றும் பெருந்துறைக்
கலிமடைக் கள்ளின் சாடி யன்னவெம்
மிளநல மிற்கடை யொழியச்
சேறும் வாழியோ முதிர்கம் யாமே.

உரை:—தலைசரிந்த மலைப்பக்கத்தில் முதலொடு கருகிய வள்ளிக்கொடிபோல, மேலி னழகெல்லாம் அழிந்து தழைந்த தாழ்ந்த கரிய கூந்தலையுடைய தோழியர் குழாமும் வருந்தி யழுங்காநின்றது: அக் களவொ

மூக்கத்தை அன்னையும் அறிந்தனளாகி இல்வயிற்செறித்து அரிய காவல் செய்வாளாயினள்: ஆதலின்,—வேறாகிய பலபல தேயங்களினின்றுங் காற்றுச்செலுத்தலால் வந்த எந்தையினுடைய பலவாய தொழிலின் பொலிவு பெற்ற கலங்கள் ஓங்கித் தோன்றும் பெரிய துறையின்கண்ணே வைத்துடைய உண்ணுதலாற் செருக்குமிகுகின்ற கள்ளின் சாடிபோன்ற எம்முடைய இளமையும் அழகும் இல்லின்கண்ணே வைகிக் கெடும்படியாக எம்மனையகத்துச் செல்லாநிற்பேம்: அம் மனைவயினிருந்தே முதிர்ந்து முடிவேம்: இன்ன தீங்கினை உறுவித்த நீ நெடுங்காலம் வாழ்வாயாக; எ - று.

கலி - செருக்கு. மடை - மடுத்தல். சாடி தலைவிக்கும் கள் அவளது நலத்துக்கும் உவமையாகக்கொள்க; இது கிழக்கிடுபொருளாக முதலொடு முதலேவந்த பயவுவமம். வாழிய - இகழ்ச்சிக்குறிப்பு. களவுக்கியலாதென்றமையின் வரைந்தெய்துகவென வரைவுகடாயதாயிற்று.

இளநலம் நீ யுண்ணுதவாறு ஒழியவென்றதனால் இனிக் களவுக்கியலாதென் றறிவுறுத்தினள். முதிர்கமென்றதனால் நீ வரைந்தெய்தாமையின் முதிர்ந்தொழிவோமென்று குறிப்பித்தாள். இதனால் தமர் வேற்றுவரைவுப் படுத்தின் உடன்படா திறந்தொழிவேமென் றறிவுறுத்தினளுமாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுகடாதல். (௨௬௪)

[பாலை.]

இது, தோழியாற் பிரிவுணர்த்தப்பட்ட
தலைமகள் சொல்லியது.

எ - து, தலைமகன் பிரிதலைத் தோழியாலறிந்த தலைவி அவளை நோக்கிக் கார்காலத்திலே நமது தலைவர் நம்மைப்பிரிந்து செல்வாராயினர்: நாம் அவரின்றி வருந்தி மனையின்கணிருப்போமாயினேம்: இஃதென்ன கொடுமை? இங்ஙனம் பிரிந்தால் இனி யாதாய்முடியுமோவென நொந்து கூறுகிற்பது.

## குதிரைத்தறியனார் பாடியது.

௨௬௫. என்னு வதுகொ றோழி மன்னர்
வினைவல் யானைப் புகர்முகத் தணிந்த
பொன்செய் யோடை புனைநலங் கடுப்பப்
புழற்காய்க் கொன்றைக் கோடணி கொடியிணர்
௫ ரேகன் மீமிசை மேதக மலரும்
பிரிந்தோ ரிரங்கு மரும்பெறற் காலையும்
வினையே நினைந்த வுள்ளமொடு துனைஇச்
செல்ப வென்ப காதல
ரொழிது மென்பநாம் வருந்துபட ருழந்தே.

உரை:—தோழீ, அரசருடைய போர்த்தொழில்வல்ல யானையின் புள்ளியையுடைய முகத்திலணிந்த பொன்னாற்செய்த நெற்றிப்பட்டத்தில் அலங்கரித்த அழகிய தோற்றம்போல உள்ளே புழலமைந்த காயையுடைய சரக்கொன்றையின் கிளைகளில் அழகிய கொடிபோன்ற பூங்கொத்துக்கள் பெரிய மலையின் மிகவுயர்ந்த இடத்தில் மேம்பட மலராநிற்கும் பிரிந்தோர் வருந்துகின்ற அருமையாகப் பெறுதற்கரிய கார்காலத்திலும் தாம் செய்யவேண்டிய காரியத்தையே கருதியவுள்ளத்துடனே நமது காதலர் விரைந்து செல்வாராயினர்: அங்ஙனஞ் செல்லுகின்றவருடன் சேரவுஞ் செல்லாமல் நாம் வருந்துகின்ற துன்பத்திலுழன்று இங்கேயே தங்கியிருக்கக் கடவோமாயினேம்: இஃதென்ன கொடுமை? இவ்வண்ணம் பிரிதலால் இனியாதாய் முடியுமோ? ஒன்றுசூழ்ந்து கூறாய்; எ - று.

எ - பெருமை. என்ப இரண்டும் அசைநிலை. கொன்றை மலர்வது கார்காலத்தாதலின் ஈண்டுக் கார்காலமெனப்பட்டது "கார்விரிகொன்றை" என்றார் பாரதம் பாடிய பெருந்தேவனாரும்; (அகம் - காப்பு.)

பிரிவி னிறந்துபடுவெனெனென்னுங் கருத்தால் என்னாவதுகொலென்றாள்.

இறைச்சி:—யானையின் நெற்றிப்பட்டம்போலக் கொன்றை கார்காலத்து மலருமென்றது யான் தலைமகற் குரிமைபூண்டொழுகும் இல்லறக் கிழத்திபோல அவரைநோக்கி மகிழ்ந்துறைந்தேன்: கார்நீக்கத்துக்கண் அம்மலர் உதிர்ந்தொழிதல்போல அவர் பிரிவினால் யான் இறந்தொழிதல் திண்ணமென்றுளென்பதாம். மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல்.

[குறிஞ்சி.]

(க.) இது, தோழி சிறைப்புறமாகத் தலைமகட்
குரைப்பாளாய்த் தலைமகன் கேட்பச்
சொல்லியது.

எ - து, தலைமகன் சிறைப்புறத்தானாக அவன் கேட்குமாற்றானே தோழி தலைமகளை நோக்கி நின்னிடத்து நிகழுங்குறிப்புப் புணர்ச்சிக்குறிப்புப்போலப் பெரிதாயிராநின்றது: நீ நாடனை முயங்கிய குறியை அன்னை நோக்கினால் ஐயப்படாநிற்குமன்றே: ஆண்டுக் கூவாநின்றனள்காணென்று மருண்டு கூறுநிற்பது.

(உ.) தோழி தலைமகளை அறத்தொடுநிலை
வலிப்பித்ததூஉமாம்.

எ - து, தோழி தலைமகளை அறத்தொடு நிற்கும்படி கூறி உடன்படுத்தியதுமாகும். (உரை இரண்டற்குமொக்கும்..)

## மதுரை, அளக்கர்ஞாழார் மகனார் மள்ளனார் பாடியது.

௨௯௭. பொன்செய் வள்ளத்துப் பால்கிழக் கிருப்ப
நின்னொளி யேறிய சேவடி யொதுங்காய்
பன்மாண் சேக்கைப் பகைகொள நினைஇ
மகிழா நோக்க மகிழ்ந்தனை போன்றனை
யெவன்கொ லென்று நினைக்கலு நினைத்திலை
நின்னுட் டோன்றுங் குறிப்புநனி பெரிதே
சிதர்நனை முணைஇய சிதர்கால் வாரணை
முதிர்கறி யாப்பிற் றுஞ்சு நாடன்
மெல்ல வந்து நல்லகம் பெற்றமை
மைய லுறுகுவ ளன்னை
யைய மின்றிக் கடுங்கூ வினளே. கூல

உரை:—தோழீ, பொன்னாற்செய்த கிண்ணத்துள் வைத்த பால் நின்னால் உண்ணப்படாமல் கீழே வைத்திருக்கின்றமைகாணாய்: நின் மேனியின் ஒளிமிக்கு வேறு வண்ணமாகத்தோன்றுவ: அன்றி மெல்ல நின் சிவந்த அடிகளால் நடந்து இயங்கினையுமல்லை: பல மாட்சிமைப்பட்ட படுக்கையைப் பகையாகக் கருதிக்கொண்டு மகிழாநோக்கம் கட்குடியான் மயங்கினாற்போலாயினை: நாம் இப்படியிருப்பது என்னகாரணமென்று நினைக்கலுஞ்செய்திலை: ஆதலின் நின்னுள்ளே தோன்றுங் குறிப்பானது மிகப் பெரிதாயிராநின்றது: வண்டுகள் மொய்க்கின்ற மலரும் பருவத்தினையுடைய பூவினை வெறுத்த மெல்லிய காலையுடைய கோழி முதிர்ந்த மிளகுக்கொடி ஒன்றோடொன்று பின்னியிருப்பதன்கண்ணே துயிலாநிற்கும் மலைநாடன் மெல்லவந்து நின் மார்பின் அடையப்பெற்றதனாலாகிய சில குறிகளை நோக்கிய அன்னை இவளுக்கு இக்குறிப்புக்கள் உண்டாயதன் காரணம் யாதென்று மயக்கமுறாநிற்கும்: உவ்விடத்தேகேளாய், ஐயப்பாடின்றி அவ்வன்னை கடுமையான குரலையெடுத்து நின்னைக் கூவுகின்றனள்காண்; எ-று.

கிழக்கு - கீழிடம். மகிழ்தல் - கட்குடித்தல். சிதர் - வண்டு. சிதர்கால் - மெல்லியகால். யாப்பு - ஒன்றோடொன்று பின்னியிருக்குங்கட்டு. இருப்ப - முற்று.

இப்பொழுது ஆசாரமும் நாணுங் காதலு மீதூர்தலானே உணவை நோக்காயாய்ப் பண்டையிற்குறைந்த வுண்டியையுடையாயென அன்னை ஐயங்கொள்ளுவளென்பாள் பால் கிழக்கிருப்ப என்பதனால் அறிவுறுத்தினாள். பண்டை நிறமின்றிக் கண்ணுங் கொங்கையுந் தோளுங் கதிர்ப்புக்

கொண்டு வேறுபடக்காட்டலானே ஐயுறுமென்பாள் நின்னொளியேறிய வென்பதனை லறிவுறுத்தினள். ஆயத்தொடு பயிலாது இடந்தலைப்பாட்டிற்கு ஏதுவாக நீங்கி நிற்றலானும் செவிலி முலையிடத்தே துயிலவேண்டாது வேறோரிடத்துப் பயின்று நிற்றலானும் செய்வினைமறைப்புப் பயில்வு முதலியவற்றான் ஐயுறுமேயென்பாள் சேவடி யொதுங்காயென்பதனை லறிவுறுத்தினள். இவை தானறிந்தனவன்றி அன்னையுமறியுமென அச்சுறுத்தினளுமாம். இவற்றை நோக்கவேண்டியே நின்னைக் கடுமையான குரலையெடுத்துக் கூவுதலையுடையளென மேலும் அச்சுறுத்தியதாயிற்று.

உள்ளுறை:—நனையை வெறுத்த வாரணம் கறிக்கொடியிலே துஞ்சுமென்றது இத்தகைய தலைவியை வருந்தவிடுத்துத் தலைவன் கரந்து தன்னூரகத்து வைகுவானாயினா னென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுகடாதல். (உகள)

[பாலை.]

இது, தோழியாற் பொருள்வலிப்பித்துத் தலைமகளை
யெய்தி ஆற்றாதாய நெஞ்சினை நெருங்கிக்
சொல்லித் தலைமகன் செல
வழுங்கியது.

எ - து, தோழி தலைவனை நெருங்கி நீ பொருளீட்டி வருகவென்று தூண்டுதலானே இயைந்த தலைமகன் காதலியையடைந்து ஆங்கு வருந்திய நெஞ்சினை நெருங்கி நெஞ்சமே, பொருள் வருவாயினையும் இவள் தோளின் பிரிவினையும் ஒருசேர நினைதலானே நீ ஒருவழியினுஞ் சென்றாயல்லை; தோழி கூறியபடி பொருள் கொணருமாறு யாம் செல்லின் ஆண்டு இவளை எதிர்காணவுமியையுமோ இயையுமாயின் நீ சென்று காணென அழிந்து கூறாநிற்பது.

விற்றூற்று, வண்ணக்கன் தத்தனார்
பாடியது.

உகூஅ. வம்ப மாக்கள் வருதிற நோக்கிச்
செங்கணை தொடுத்த செயிர்நோக் காடவர்
மடிவாய்த் தண்ணுமைத் தழங்குகுரல் கேட்ட
வெருவைச் சேவல் கிளைவயிற் பெயரு
மருஞ்சுரக் கவலை யஞ்சுவரு நனந்தலைப்
பெரும்பல் குன்ற முள்ளியு மற்றிவள்
கரும்புடைப் பணைத்தோ ணோக்கியு மொருதிறம்

பற்றாய் வாழியெந் நெஞ்சே நற்றார்ப்
பொற்றேர்ச் செழியன் கூட லாங்க
ணொருமை செப்பிய வருமை வான்முகை
யிரும்போது கமழுங் கூந்தல்
பெருமலை தழீஇயுநோக் கியையுமோ மற்றே.

உரை:—எமது நெஞ்சமே, அயல்நாட்டு மாந்தர் நெறியில் வருகின்ற தன்மையைநோக்கி அவரைக் கொள்ளைகொள்ளும் பொருட்டுச் சிவந்த அம்பைச்செலுத்திய சினத்தொடு நோக்குகின்ற மறவருடைய தோலை மடித்துப்போர்த்த வாயையுடைய தண்ணுமையை முழக்கி யெழுப்பும் ஓசையைக்கேட்ட பருந்தின் சேவல் அச்சமுற்றுத் தன் சுற்றத்திடத்துச் செல்லாநிற்கும் சென்று சேர்தற்கரிய பாலைநிலத்தின்கணுள்ள கவர்த்தவழிகளையுடைய கருதினவர்க்கு அச்சந்தோன்றுகின்ற அகன்ற இடத்தையுடைய பெரிய பலவாய குன்றுகளைப் பொருள்தேடு விருப்பினாலே செல்ல நினைந்தும், இவளுடைய கரும்பெழுதப்பெற்ற பருத்த தோளைப் பிரியவேண்டியிருத்தலினால் அதனுக்கஞ்சிப் பலமுறை நோக்கியும் நீ ஒரு நெறியைக் கடைப்பிடித்து ஒழுகுவாயல்லை; நல்ல மாலையணிந்த பொன்னாலாகிய தேரையுடைய பாண்டியனது மதுரையம்பதியிலே இவள் தோழி ஒருதன்மையாகப் பொருள்வயிற் செல்லும்படி உறுதிப்படுத்திக்கூறிய அருமையாகிய மொழியினால் யாம் பெரிய மலைநெறியைத் தழுவிய பின்னும் வெளிய அரும்புமலர்ந்த பெரிய மலரின் மணம்வீசுங் கூந்தலையுடையாளைப் பார்ப்பதற்கு இயையுமோ? இயையுமாயிற் பொருள்வயிற்பிரிந்து சென்று காண்; எ - று.

நோக்க என்பதின் அகரம் தொகுக்கும் வழித்தொக்கது.

இறைச்சி:—எருவைச்சேவல் தண்ணுமையொலிக்கஞ்சித் தன் சுற்றத்திடத்துப் பெயர்ந்து செல்லாநிற்குமென்றது யாம் பொருள்வயிற்சென்றாலும் ஈண்டு இவள்படும் ஏதத்தைக்கருதின் அஞ்சி மீண்டெய்துவாம் போலுமென்றதாம். மெய்ப்பாடு - பிறன்கட்டோன்றிய இளிவரல் பொருளாகப்பிறந்த அவலம். பயன் - இல்லத்தழுங்கல். (௨௬௮)

[நெய்தல்.]

இது, தோழி தலைமகன் சிறைப்புறமாகச் சொல்லியது.

எ - து, தலைமகன் சிறைப்புறத்தானாதலை யறிந்த தோழி தான் சொல்லுவதனை அவன் அறிந்தவுடன் 'நாமின்மையின் இவருமிலர்போலும்' என நன்றாக அறிந்து விரைவின் மணம்புரிந்துகொள்ளும்வண்ணம் தலைவியை

நெருங்கி நாம் களவினியங்குவதறிந்து நம்முடைய சிறுகுடி என்ன துன்ப மெய்தினும் அவரே நமது தலைவராவார்: அவரை மகிழ்ந்து கூடாதநாளில் நாமிருந்தும் இல்லாதேமாதலையறிவோம்: அது கழிந்ததேயென அழிந்து கூறுகிறபது.

## வடம வண்ணக்கன் பேரிசாத்தனார் பாடியது.

௨௬௬. உருகெழு யானை யுடைகொண் டன்ன
ததர்பிணி யவிழ்ந்த தாழை வான்புதர்
தயங்கிருங் கோடை தாக்கலி னுண்டாது
வயங்கிழை மகளிர் வண்டிற் றூஅங்
5 காமர் சிறுகுடி புலம்பினு மவர்கா
ணுமில மாகுத லறிது மன்னோ
வில்லெறி பஞ்சி போல மல்குதிரை
வளிபொரு வயங்குபிசிர் பொங்கு
நளிகடற் சேர்ப்பனொடு நகாஅ வூங்கே.

உரை:—அச்சத்தைச்செய்கின்ற யானை நல்ல ஆடையை அணிந்து கொண்டாற்போன்ற நெருங்கிய பிணிப்பு அவிழ்ந்த பெரிய தாழைப்புதரில் இயங்குகின்ற கடிய மேல்காற்று மோதுதலாலே நுண்ணிய மலரினுள்ள தாதுக்கள் வயங்கிய கலனணிந்த மகளிருடைய வளைகள் உடைந்து உதிர்ந்தாற்போல உதிர்ந்து பரவாநிற்கும் அழகிய கடற்கரையிலுள்ள சிறிய ஊர் வருத்தமுறுவதாயினும் அச் சேர்ப்பரே நமது தலைவர்காண்: வில்லாலடிபட்ட பஞ்சுபோல நிரம்பிய அலைகளிலே காற்றுமோதுதலால் வயங்கிய பிசிர்கள் மிகுகின்ற நெருங்கிய கடற்கரையின் தலைவராகிய அச்சேர்ப்பரொடு மகிழ்ந்து கூடாதநாளில் நாம் இருந்தும் இல்லாதேம்போலாதலையறியாநின்றோமன்றே: அங்ஙனமாகியும் இப்பொழுது அவர் தொடர்பு கழிந்ததுகண்டாய்: இஃதென்ன இன்னுமையுடையது? எ - று.

தாழையிலை அடியளவுந்தாழாது மேலே சிறிதளவு தழைதலால் யானை முதுகிலிடும் ஆடையை யுவமித்தார். பிசிர் - அலையின்கணெழுந் திவலை. இதிலுள்ள யாவும் உவமையும் பொருளும் ஒத்தலால் உள்ளுறையின்மை தெளிக.

தன்னையே கேள்வனாகக் கொண்டனளென்பதை அவன் அறியுமாற்றானே குடிபுலம்பின் அவர் என எடுத்தவள் பிறர்கேட்பர் கொல்லென் றஞ்சி இசையெச்சத்தால் தலைவரெனக்கொள்ளுமாறு வைத்தாள். இன்றி

யமையாமை கூறுவான் நாமிலமாத லறிதுமென்றான். களவினியலாமையிற் புணர்ச்சியருகியதால் அது கழிந்ததேயென் றிரங்கினாள். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுகடாதல். (உகக)

[மருதம்.]

(க.) இது, வாயின் மறுத்தது.

எ - து, பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனால் விடப்பட்டுக் காமக்கிழத்தியிடத்துத் தூதாகவந்த பாணனை அவட்குப்பாங்காயின விறலி நோக்கி ஊரனுவான் சிறியவளையையுடைய இவட்கு இஃது ஈடென்று தனது தேரை அலங்கரித்து என் முன்றிலின்கண்ணே நிறுத்தியிட்டு வேறுவா ளொருபரத்தைபாற் சென்றனன்கண்டாய்: அவனது தேரொடு வந்த நீயும் அவனொடுபோகாது எமது அட்டிற்சாலைக் கூரையைப் பற்றி நிற்கின்றனை; அப்படியே நீ நிற்பாயாகவென வெகுண்டு கூறுநிற்பது.

(உ.) வரைவுகடாயதூஉமாம். மாற்றோர்
நொதுமலாளர் வரைவின் மேலிட்டு
மருதத்துக் களவு.

எ - து, வரையாது வந்தொழுகுந் தலைமகனை நெருங்கிய தோழி ஐயனே, வரைவுவேண்டிவந்த அயலானொருவன் நமது தலைமகளின் வளைவிலை யிதுவாகுமென்று தனது தேரை முன்றிலின்கண் வைகவிடுத்து அகன்றொழிந்தனன்: நீயும் அங்ஙனம் அகன்றொழியாது போந்து மணம் புரிந்து கொள்ளென ஆய்ந்து வரைவுகடாதல் தோன்றும்வண்ணங் கூறியதுமாகும்.

பரணர் பாடியது.

௩00. சுடர்த்தொடிக் கோமகள் சினஇ்தென வதனெதிர்
மடத்தகை யாயங் கைதொழு தாஅங்
குறுகா லொற்ற வொல்கி யாம்ப
றாமரைக் கிறைஞ்சுந் தண்டுறை யூரன்
சிறுவளை விலையெனப் பெருந்தேர் பண்ணியெம்
முன்கடை நிறீஇச் சென்றிசி னோனே
நீயுந், தேரொடு வந்து போதல்செல் லாது
நெய்வார்ந் தன்ன துய்யடங்கு நரம்பி
னிரும்பா ணொக்கற் றலைவன் பெரும்பு
ணேஎர் தழும்ப னூணூ ராங்கட்
பிச்சைசூழ் பெருங்களிறு போலவெ
மட்டி லோலை தொட்டனை நின்மே.

உரை:—நெய்வடிந்தாலொத்த பிசிரடங்கிய நரம்பு பூட்டிய யாழை யுடைய பெரிய சுற்றத்தையுடைய பாணர்தலைவனே, விளங்குகின்ற தொடி யணிந்த அரசகுமாரி சினங்கொண்டவுடன் அவ்விடத்தில் மடப்பத்தை யுடைய தோழியர்குழாம் கைதொழு திறைஞ்சினாற்போல மிக்க காற்று மோதுதலானே ஆம்பல்குவிந்து தாமரைமலரிடத்திலே வந்து சாய்ந்து வணங்காநிற்கும் தண்ணிய துறையையுடைய ஊரன் ஏனையொருத்திக்குப் பரியமளிக்கவேண்டிச் செல்லுவான் இடையே எம்மைக்காண்டலானே சிறிய வளையினையுடைய விலட்குரிய விலை இதுவென்று தன் பெரிய தேரை அலங்கரித்து எமது முன்றிலின்கண்ணே நிறுத்தியிட்டு வேறொரு பரத்தையின் மனையகம் நாடிச்சென் றொழிந்தனன்கண்டாய்; அவனது தேருடனே வந்த நீயும் அவன் பின்னே செல்லாது போரிலே பெரிய புண்ணால் அழகுபெற்ற 'தழும்பன்' என்பவனது ஊணூரிடத்துள்ள பிச் சைக்குவந்த பெருங்களிறு நிற்றல்போல எம்முடைய அட்டிற்சாலைக்கூரை யின் பனையோலையைத் தொட்டுநிற்கின்றனை: அவ்வண்ணமே நிற்பா யாக; எ - று.

உள்ளுறை:—காற்று மோதுதலாலே ஆம்பல் தாமரையைத் தாழு மென்றது தலைவன் நின்னை ஏவுதலாலே நீ இங்குவந்து இறைஞ்சி நடலை பயிற்றாநின்றனையென்றதாம். மெய்ப்பாடு - வெகுளி. பயன் - வாயின் மறுத்தல்.

இரண்டாந்துறையின் உரை:—ஊரனொருவன் இவளைப் பொன்ன ணியவேண்டி இச்சிறிய வளையுடையாளுக்கு விலை யீதென்று தனது தேரினை அலங்கரித்து நிதியத்தொடு எமது முன்றிலிற்கொணர்ந்து நிறுத்தி அந்தணர் சான்றோர் முதலாயினோரை யழைத்துவரப்போயினான்: நீயும் அவ்வண்ணம் தேரொடுவந்து நிதியந்தந்து மணந்துசெல்லாது பாணரொக்க லுக்கு உணவளிக்குந் தழும்பனது ஊணூரென்னுமிடத்தே களிறுநிற்றல் போல இரவுக்குறியிடமாகிய அட்டிற்சாலைக் கூரைப் பனையோலையைத் தொட்டுக் கருதிக்கொண்டிருக்கின்றனை: அங்ஙனமே நிற்பாயாக; எ - று.

[குறிஞ்சி.]

இது, சேட்படுத்துப் பிரிவின்கண் அன்பின்
இயற்கையில் தகுவகையதோ ராற்றாமையி
னானென்று தோழி தன்னுள்ளே
சொல்லியது.

எ - து, தலைமகளைக் குறைநயப்பித்துக் கூட்டுவிக்குந்தோழி தலைவி யின் அருமைபெருமை முதலாயவைகளை யறிந்து தலைமகன் விரைவில்

வரைதல் காரணமாக அவனுக்கு இயையாது மறுத்துக்கூறி அவன்படுந் துன்பத்தை அறிந்துவைத்தும் எமது அன்னை இவளைப் பலகாலும் நோக்கிப் புகழ்ந்துகூறித் தன்மனத்து மறக்கபபடாத தன்மையளா யிராநின்றுளாத லின் இங்குக் கூட்டுவிப்பதை யறிந்தால் எத்தன்மையளாமோ? யான் இதனை யஞ்சுகின்றேனென்று தன்னுள்ளே கவன்றுகூறுநிற்பது.

## பாண்டியன் மாறன்வழுதி பாடியது.

௧0௧. நீண்மலைக் கலித்த பெருங்கோற் குறிஞ்சி
நாண்மலர் புரையு மேனிப் பெருஞ்சுனை
மலர்பிணைத் தன்ன மாயிதழ் மழைக்கண்
மயிலோ ரன்ன சாயற் செந்தார்க்
௫ கிளியோ ரன்ன கிளவிப் பணைத்தோட்
பாவை யன்ன வனப்பின ளிவளெனக்
காமர் நெஞ்சமொடு பலபா ராட்டி
யாய்மறப் பறியா மடந்தை
தேமறப் பறியாக் கமழ்கூந் தலளே.

உரை:—அகிலி னெய் பூசி நீங்கதில்லாத மணம்வீசுகின்ற கூந்தலை யுடைய தலைமகள் தான் பருவமுடைய ளாயினமையால் நீண்ட மலையிலே தழைந்த பெரிய தண்டினையுடைய குறிஞ்சியின் விடியலிலே விரிந்த மலர் போன்ற மேனியையும், பெரிய சுனையிலுள்ள குவளைமலர் எதிரெதிர்வைத் துப் பிணைத்தாற்போன்ற இமையையுடைய கரிய குளிர்ச்சிபொருந்திய கண்ணையும், மயிலி னொருதன்மையொத்த சாயலையும், கழுத்திலிட்ட சிவ ந்த வரையுடைய கிளியின் ஒருதன்மையொத்த சொல்லையும், பருத்த தோளையும், கொல்லிப்பாவைபோன்ற அழகையுமுடையவள் இவளென்று விருப்பம்வரும் உள்ளத்துடனே பலபடியாகப் புகழ்ந்துகூறி எமது தாய் சிறிதும் மறக்கப்படாத மடந்தையா யிராநின்றுளாதலின் இவளது ஆற்று மைதீரக் கூட்டுவிப்பதை யறியின் அவ்வன்னை எத்தன்மையளாவாளோ?* இதற்கு யான் அஞ்சுகின்றேன்; எ - று.

தேம் - அகிலினெய். செந்தார் - கழுத்திலிட்டவரை.

தலைமகள் பருவமெய்திக் கதிர்ப்புக்கொண்டதனை நோக்கினமையிற் புறத்தேபோனல் முருகு அணங்குமோவென்று அன்னை ஒழியாது கருது பவளாதலின் யாய்மறப்பறியா மடந்தையென்றுள். மெய்ப்பாடு - பிறன்கட் டோன்றிய வருத்தம்பற்றிய அவலம். பயன் - தானேகூறியாறுதல். (௧0௧)

[பாலை.]

இது, பருவங்கழிந்தது கண்டு
தலைமகள் சொல்லியது.

எ - து, கார்காலம் வரும்பொழுது வருவேனென்றுகூறி வினைவயிற் சென்ற தலைமகன் முன்புகூறிய பருவம்வந்து நீங்குமளவும் வாராமையாலே தலைமகள் நெஞ்சழிந்து சுரநெறியேகிய நமதுகாதலர் கொன்றைகள்மலர்ந்து கார்காலஞ் செய்ததனை அறிந்திலராயினும் புதர்தொறும் மலர்ந்த எறுழமலர் வெண்ணிறம்பெறுகின்ற கூதிர்க்காலத்தையும் அவர் அறிந்திலரோவென நொந்து கூறுநிற்பது.

## மதுரை, மருதனிளநாகனார் பாடியது.

கூ0உ. இழையணி மகளிரின் விழைதகப் பூத்த
நீடுசுரி யிணர சுடர்வீக் கொன்றைக்
காடுகவின் பூத்த வாயினு நன்றும்
வருமழைக் கெதிரிய மணிநிற விரும்புத
னரைநிறம் படுத்த நல்லிணர்த் தெறுழ்வீ
தாஅந் தேரலர் கொல்லோ சேய்நாட்டுக்
களிறுதைத் தாடிய கவிழ்க ணிடுநீறு
வெளிறில் காழ வேல நீடிய
பழங்கண் முதுநெறி மறைக்கும்
வழங்கருங் கான மிறந்திசி னோரே.

உரை:—வேற்று நாட்டிலே களிறு காலாலுதைத்துப் போகட்டொழிந்த மேல்கீழாகப்படிந்த மிக்க புழுதி வெளிறின்றி வயிரமேறிய வேலமரங்கள் நெருங்கிய செல்லுவோருக்குத் துன்பஞ்செய்தலையுடைய முதிர்ந்த நெறியை மறையாநிற்கும் மக்கள் நடத்தற்கரிய சுரநெறியின்கண்ணே சென்ற தலைவர் பொன்னாலாகிய கலன்களை மிக அணிந்த மகளிர்போல யாவரும் விரும்பும் வண்ணம் மலர்விரிந்த நீண்ட சுரிந்த பூங்கொத்திலுள்ள விளங்குகின்ற பூவையுடைய கொன்றைக்காடு அழகுமிக்கிருந்த அதனையறிந்திலரேனும் பெரிதும் வருகின்ற மழையை நோக்கி மலர்ந்த நீலமணியினிறம்போன்ற கரிய புதர்களிலுள்ள நல்ல பூங்கொத்தை யுடைத்தாகிய எறுழமலர் மழைக்காலம் நீங்குதலாலே தன்னிறமாறி வெண்மைநிறம் பொருந்தியிருத்தலை அவர் தாம் அறியாரோ? அறிந்திருப்பாரேல் முன்பு தாம் கூறிய பருவங்கழிகின்றதேயென்று வந்திருப்பரே; எ - று.

நீறு நெறியைமறைக்குங் கானமென்க. மணிநிற இணரையுடைய தெறுழமலரெனவுமாம்.

தலைவர் விரைவில்வந்து முயங்குதற்கு மில்லையேயென்பாள் சேய்நாட்டிறந்திசினேரென்றாள். இது துன்பத்துப்புலம்பல்.

இறைச்சி:—இரும்புதரிலுள்ள மணிநிறமலர் நரைநிறம்படுத்தவென்றது மணிநிறமுடைய யானும் விளர்ப்புநிறம்பெற்றேனென்றதாம். மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (௩0௨)

[நெய்தல்.]

(௧.) இது, வேட்கை தாங்ககில்லாளாய்த்
தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

எ - து, தலைவன்மீதுண்டாகிய காதலானது கைகடந்து பெருக அது தாங்க இயலாத தலைவி தோழியை நெருங்கி நாம் துயரமடைதல்போல நமது கொண்கனும் துன்பமெய்தி 'நள்ளிரவினும் நமது காதலி துயிலாளாய் வருந்துவளோ' என்று தன் நெஞ்சிலே கருதுவதுண்டாகுமோ, ஆகுமெனில் ஒன்று கூறுவாயாகவென்று அழிந்து கூறாநிற்பது.

(௨.) சிறைப்புறத்தானென்பது மலிந்ததூஉமாம்.

எ - து, தலைமகன் ஒருசிறைவந் துறைவதனை யறிந்ததோழி சொல்லியதுமாகும். (உரை இரண்டற்கு மொக்கும்.)

## மதுரை, ஆருலவியநாட்டு, ஆலம்பேரி, சாத்தனார் பாடியது.

௩0௩. ஒலியவிந் தடங்கி யாம நள்ளெனக்
கலிகெழு பாக்கந் துயின்மடிந் தன்றே
தொன்றுறை கடவுள் சேர்ந்த பராரை
மன்றப் பெண்ணை வாங்குமடற் குடம்பைத்
துணைபுண ரன்றி லுயவுக்குரல் கேட்டொறுந்
துஞ்சாக் கண்ண ளெமாடச் சாஅய்
நம்வயின் வருந்து நன்னுத லென்ப
துண்டுகொல் வாழி தோழி தெண்கடல்
வன்கைப் பரதவ ரிட்ட செங்கோற்
கொடுமுடி யவ்வலை பரியப் போகிக்
கடுமுரா ணெறிசுறு வழங்கு
நெடுநீர்ச் சேர்ப்பன்ற னெஞ்சத் தானே.

உரை:—தோழீ, நெடுங்காலம் வாழ்வாயாக; 'ஊரோசையவிந்தடங்கி இரவு நடுயாமமாதலும் கட்குடியின் செருக்கு அடங்கிப் பாக்கமுந் துயிலா

நின்றதே: இப்பொழுது நமதுகாதலனை நினைந்து நாம் வருந்துதல்போலத் தெளிந்த கடலின்கண்ணே வலிய கையையுடைய பரதவமாக்கள் மீன்பிடித்தற்கு நெடுக இட்ட சிவந்த நிறத்தையும் வலித்துக்கட்டிய முடியையுமுடைய அழகிய வலை பீறுபடக் கிழித்துச் சென்று அச்சத்தைச்செய்யும் வலிமையுடைய தன் மருப்பினாற் கொல்லவல்ல சுறாமீன் இயங்காநிற்கும் நீண்ட நீர்த்துறையுடைய தலைவனது உள்ளத்திலும் பண்டுதொட்டு உறைகின்ற கடவுள் தங்கப்பெற்ற பருத்த அடியையுடைய ஊர்ப்பொதுவிலுள்ள பனையின் வளைந்த மடலிடத்துச்செய்த குடம்பையின்கண் ணிருந்து தன் பெடையைப் புணர்கின்ற மகன்றிலின் வருத்தந்தரும் குரலைக் கேட்குந்தோறும் நல்ல நுதலினையுடைய நமது காதலி கண்ணுறங்காது காமநோய் வருத்துதலானே உடம்பு மெலிந்து நம்மீது வருத்தமடையாநிற்பள்' என்பதும் உண்டாகுமோ? ஆராய்ந்து கூறாய்; எ - று.

மன்றப்பெண்ணை - ஊர்ப்பொதுப்பனை. தங் குலதெய்வத்தையும் ஊர்ப்பொதுத் தெய்வத்தையும் பனையிலேற்றுவித்து வணங்கிவருவது தொன்றுதொட்டுவரும் நெய்தனிலத்து வழக்கு.

உசாவுவாருண்டாயவிடத்துச் சிறிதாற்றலாமெனினும் அதுவுமில்லாதபடி பாக்கந் துயின்மடிந்ததேயென் றிரங்கினாள்.

உள்ளுறை:—பரதவரிட்ட வலையைக் கிழித்துச்சென்று சுறா இயங்குமென்றது நாம் நமது அன்பினாலே பிணிக்கவும் தலைவன் அதனையிகந்து சென்று வைகாநின்றானென்றதாம். மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (௩௦௩)

[குறிஞ்சி.]

இது, வரையாது நெடுங்காலம் வந்தொழுக
ஆற்றாளாகிய தலைமகள் வன்பொறை
எதிர் மொழிந்தது.

எ - து, வரைந்துகொள்ளாது பலநாளும் களவில்வந் தொழுகுந் தலைமகனை நினைந்து வருநெறியின் ஏதங்கருதி வருந்திய தலைமகள் தன்னை வருந்தாதேயென்று தோழி பலகாலுங் கூறுதலானே தாங்காது எதிர்மொழிபவள் தலைவனை முயங்கினபோது எழிலும் பிரிந்தபோது பசலையுந் தோன்றுதலால் அவன் மார்பு இன்பமுந் துன்பமு முடையதென்று கூறுவதுடன் உள்ளுறையால் அவன் விரைய மணஞ்செய்துகொள்வானாக வெனவும் பரிந்து கூறாநிற்பது.

## மாறோக்கத்து, நப்பசலையார் பாடியது.

௩௦௪. வாரன் மென்றினைப் புலவுக்குரான் மாந்திச்
'சாரல் வரைய கிளையுடன் குழீஇ

வளியெறி வயிரிற் கிளிவிளி பயிற்று
நளியிருஞ் சிலம்பி னன்மலை நாடன்
புணரிற் புணருமா ரெழிலே பிரியின்
மணிமிடை பொன்னின் மாமை சாயவெ
னணிநலஞ் சிதைக்குமார் பசலை யதனா
லசுணங் கொல்பவர் கைபோ னன்று
மின்பமுந் துன்பமு முடைத்தே
தண்கமழ் நறுந்தார் விறலோன் மார்பே.

உரை:—கிளிகள் சாரல்பொருந்திய மலையிலுள்ள சுற்றத்தொடு சேர்ந்து தாம் கொள்ளையிடுதற்குரிய மெல்லிய தினையின் மணம்நிரம்பிய கதிரைக் கொய்துதின்று காற்றினால் ஒலியெழும்புங் கொம்புவாச்சியம்போல ஒன்றனை யொன்று அழையாநிற்கும் நெருங்கிய பக்கமலைகளையுடைய நல்ல மலைநாடன் வந்து என்னைப் புணர்ந்த காலமெல்லாம் எனக்கு நல்ல அழகு உண்டாகாநிற்கும்: அவன் என்னைப் பிரிந்தாலோ நீலமணியிடைப்பட்ட பொன்போல எனது மெய்யின் மாந்தளிரின் தன்மைகெட என்னழகையும் நலத்தையும் பசலைதோன்றிக் கெடுக்காநிற்கும்: ஆதலினால் தண்ணிதாய் மணங்கமழும் நறிய மாலையணிந்த வலிமையுடைய நமது காதலன் மார்பானது இசையறிவிலங்காகிய அசுணமானைக் கொல்பவருடைய கையைப் போல இன்பமுந் துன்பமு முடையதாயிராநின்றது; எ - று.

வாரல் - நீளுதலுமாம். ஆர் இரண்டும் அசைநிலை. அசுணங்கொல்பவர் முதலில் யாழைவாசித்துப் பின்பு செவியி லேற்கவொண்ணாத பறையை முழக்கி அவற்றைக் கொல்வதனால் இன்பமுந் துன்பமு முடைமையின் அதனையுவமித்தார்.

உள்ளுறை:—கிளி கிளையொடு குழீஇவந்து தினையைத் தின்று விளி பயிற்றும் நாடனென்றது அப்படிப்போலத் தலைமகனும் அந்தணர் சான்றோருடன் குழீஇவந்து என்னை மணந்து என்னலனைத்துய்த்து மகிழ்ந்து விளையாடப்பெறுவானாக வென்றதாம். மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (௩௦௪)

[பாலை.]

(க.) இது, நற்றாய் தோழிக்குச் சொல்லியது.

எ - து, தலைமகன் தலைமகளை இரவில் உடன்கொண்டு சென்றனனென்று செவிலியாலறிந்த ஈன்றதாய் அஃது, அறநெறியென்று கொண்டும் பிரிதல்பொறாது தோழியை நெருங்கி 'மகளே, நினதுதோழி ஆடியபந்தும் அவள் ஓம்பிவந்த வயலையங்கொடியும், விளையாடிய நொச்சியும், அவளில்லாது தனியேகண்ட சோலையும் என்னை வருத்தாநிற்ப அதனொடு நில்

லாமே காட்டின்கண்ணே நண்பகலிற் புறவின்குரலைக்கேட்டு அமர்த்த நோக்கத்தால் அவ்விடலை வருந்தவுஞ் செய்யுமோவென என்னுள்ளந் துயர மெய்துவதேயென் றழிந்து கூறுநிற்பது.

(உ.) மனைமருட்சியுமாம்.

எ - து, ஈன்றதாய் மனையின்கண்ணே யிருந்து மருண்டு சொல்லியது மாம். (உரை இரண்டற்கு மொக்கும்.)

கயமனார் பாடியது.

௧௦௫. வரியணி பந்தும் வாடிய வயலையு
மயிலடி யன்ன மாக்குர னொச்சியுங்
கடியுடை வியனகர் காண்வரத் தோன்றத்
தமியே கண்டதண் டலையுந் தெறுவர
நோயா கின்றே மகளைநின் றோழி
யெரிசினந் தணிந்த விலையி லஞ்சினை
வரிப்புறப் புறவின் புலம்புகொ டெள்விளி
யுருப்பவி ரமையத் தமர்ப்பன னோக்கி
யிலங்கிலை வென்வேல் விடலையை
விலங்குமலை யாரிடை நலியுங்கொ லெனவே.

உரை:—மகளே, நினது தோழி விளையாடிய வரிந்து அணிந்த பந்தும், நீர்விடுவாரின்மையாலே வாடிய அவளோம்பிவந்த வயலைக்கொடியும், சிற்றில்கோலி விளையாடிய மயில்போன்ற இலையையும் கரிய பூங்கொத்தையு முடைய நொச்சியும், காவலையுடைய அகன்ற மாளிகையிடத்து எதிரே காணும்படி தோன்றுநிற்ப, அவளின்றித் தமியேகண்ட சோலையும் என்னை வருத்தாநிற்ப அவற்றொடு, நினது தோழி ஆதித்தமண்டிலங் கொதிப்புச் சிறிதடங்கிய மாலையின் முற்படுபொழுதில் இலையுதிர்ந்த அழகிய மரக்கிளையிலிருந்து வரிபொருந்திய முதுகினையுடைய புறாவினது அச்சங்கொள்ளத் தக்க தெளிந்த கூவுதலாகிய ஓசையைக்கேட்டு வெப்பமிக்க பொழுதின்கண் வருந்திப் போர்செய்யப் புகுந்தாற்போன்ற கண்ணையுடையளாய் நோக்கி இலங்கிய இலைவடிவாகிய வெற்றிபொருந்திய வேற்படையையேந்திய காதலனை மலைகுறுக்கிட்ட அரிய நெறியிடத்தே துன்புறுத்துங்கொல்லோவென்றே எனக்கு வருத்தமுண்டாகாநின்றது; எ - று.

மகளை, ஐ - சாரியை. நலியுமோவென நோயாகின்று எனக்கூட்டுக.

தன் புதல்வி காதலனொடு கலந்து இனியவாழ்வெய்தக்கண்டால் இப்பொழுது அவளின்றிக் காணப்படும் பந்து முதலாயவற்றானெய்துந் துயரமெல்லா மொருங்கேயகலும்; அவ்வண்ணமின்றி அவனை வெறுக்கச்செய்

யின் இல்லறநிகழ்த்தற்கியலாது வருந்துமே யென்பதுகொண்டு பந்துமுத லாய கண்டவழி யெய்துந் துன்பமேயன்றி விடலையை நலியுங்கொலென்று மிரங்கினுள். மெய்ப்பாடு - உவகைக்கலுழ்ச்சி. பயன் - ஆற்றுமை நீங்குதல்.

[குறிஞ்சி.]

(க) இது, புனமடிவுரைத்துச் செறிப்பறிவுறீஇயது.

எ - து, தலைமகன் ஒருபுறமாகவந்து மறைந்துறைதலை யறிந்த தோழி புனங்கொய்தலையும் தலைமகளை இல்வயிற்செறிப்பதனையும் அவனறிந்து விரைய மணம்புரிந்துகொள்ளும்படி கூறுவாளாகி நமர் தினைப்புனங் கொய் யலுறுகின்றனர்: அன்றி, இறைவியையும் மனையகங் கொண்டுபுகுதுவாரா யினுர்; இனி, அவளை நமது புனத்தின்கண்ணே காணவு மியையாதேயென நொந்துகூறுகிற்பது.

(உ.) சிறைப்புறமுமாம்.

எ - து, தலைமகன் சிறைப்புறத்தானுகக் கூறியதுமாகும். (உரை இரண் டற்குமொக்கும்.)

உரோடோகத்துக், கந்தரத்தனுர்

பாடியது.

௩0௬. தந்தை வித்திய மென்றினை பைபயச்
சிறுகிளி கடிதல் பிறக்கியா வணதோ
குளிர்படு கையள் கொடிச்சி செல்கென
நல்ல வினிய கூறி மெல்லக்
கொயல்தொடங் கினரே கானவர் கொடுங்குரற்
குலவுப்பொறை யிறுத்த கோற்றலை யிருவி
விழவொழி வியன்களங் கடுப்பத் தெறுவரப்
பைத லொருநிலை காண வைகல்
யாங்கு வருவது கொல்லோ தீஞ்சொற்
செறிதோட் டெல்வளைக் குறுமகள்
சிறுபுனத் தல்கிய பெரும்புற நிலையே.

உரை:—'கிளிகடிகருவி பொருந்திய கையையுடைய கொடிச்சியே, நீ மனையகம்புகுவாயாக' என்று நல்ல இனிய மொழிகளை மொழிந்து கான வர் மெல்லத் தினைக்கதிரைக் கொய்யத்தொடங்கினர்: ஆதலின் எமது தந்தை விதைத்த மெல்லிய தினையைக் கொய்துகொண்டுபோமாறு மெல்ல மெல்ல வருகின்ற சிறிய கிளிகளை வெருட்டுதல் இனி எப்படியாகும்? அங்

னம் விளைந்த கதிர்களாகிய குலவிய பொறையைக் கொய்தொழித்த கொம் பாகிய தலையையுடைய தினைத்தாள்கள் தாம் திருவிழாச்செய்தொழிந்த அகன்ற அவ் விழாக்களம்போலப் பொலிவழிந்து எம்மை வருத்தாநிற்கை யில் இவ்வண்ணம் கொல்லை யழிந்ததன்மையையும், இனிய சொல்லும் நெருங்கிய தொகுதியான ஒளிபொருந்திய வளையுமுடைய இளமையுற்ற எங்கள் தலைமகள் முன்பு சிறிய தினைப்புனத்துப் பெரிய மேற்கூரையுடைய கட்டுப்பரணிலே நின்ற நிலைமையையும் பார்க்கும்பொருட்டுக் காலையிலே தலைமகன் எப்படி வருதலியையுமோ? இயையாதே; எ - று.

பிறக்கு - அசைநிலை. பொறை - பாரம். இருவி - தினைத்தாள்.

கிளியோப்புதலில்லையாதலின் இனிப் புனத்து வந்து பகற்குறி கூடவு மியையாதேயென்பாள் யாவணதென்றாள். செல்கவென்பதனால் இற்செறிப் பறிவுறுத்தினாள். இங்ஙனங்கூறவே வரைந்துகொள்கவென அறிவுறுத்தி னாளுமாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுகடாதல். (௩0௬)

[நெய்தல்.]

இது, குறிநீட ஆற்றாளாகிய தலைமகளைத்
தோழி வற்புறுத்தியது.

எ - து, தலைமகன் குறித்த குறியிடத்துவரப் பாணித்தமையால் அது பொறாது வருந்திய தலைவியைத் தோழி நோக்கி அங்கே தேரின் மணி யொலி இசையாநிற்கும்: இளையரும் ஒலியாநிற்பர்: ஆதலின் நினது நல னுகரும்படி கொண்கன் இன்னே வருகுவன்காண்: வருகின்ற அவன் தான்நம்மைக் காணாது வருந்துவதை நாம் சிறிதுபொழுது கண்டுமகிழும் வண்ணம் இங்குள்ள புன்னையடிமறைவில் மறைந்துகொள்வோம் வருவா யாகவென்று வலியுறுத்திக் கூறாநிற்பது.

அம்மூவனார் பாடியது.

௩0௭. கவர்பரி நெடுந்தேர் மணியு மிசைக்கும்
பெயர்பட வியங்கிய விளையரு மொலிப்பர்
கடலாடு வியலிடைப் பேரணிப் பொலிந்த
திதலை யல்கு னலம்பா ராட்டிய
வருமே தோழி வார்மணற் சேர்ப்ப
னிற்பட வாங்கிய முழவுமுதற் புன்னை
மாவரை மறைகம் வம்மதி பானாட்
பூவிரி கானற் புணர்குறி வந்துநம்
மெல்லிணர் நறும்பொழிற் காணா தவ
னல்ல லருங்படர் காண்கநாஞ் சிறிதே.

உரை:—தோழீ, செல்லுதலில் விருப்பமுடைய குதிரைபூட்டிய நெடிய தேரிலே கட்டிய மணியும் ஒலியாநிற்கும்: பெயர்ந்துபட நடக்கின்ற வீரரும் ஆரவாரியாநிற்பர்: ஆதலின் நெடிய மணற்குன்றினையுடைய சேர்ப்பன் மகளிர்சென்று கடனீராடுகின்ற அகன்ற இடத்திலே மிக்க அழகுடன் பொலிந்து விளங்குகின்ற துத்திபடர்ந்த நினது அல்குலின் நலனைப் பாராட்டுமாறு இப்பொழுதே வருகிற்பன்காண்: அவ்வண்ணம் வரினும் இதுகாறும் வாராது நம்மை நடுங்கவைத்துளனாதலின் அவனும் இந் நடுயாமத்து மலர்விரிந்த சோலையில் நாம் புணர்கின்ற குறியிடத்து வந்து மெல்லிய பூங்கொத்தினையுடைய நறிய சோலையின்கண்ணே நம்மை எதிர் காணாதவனாகிப் படுகின்ற நீங்குதற்கரிய அல்லலாகிய துன்பத்தையும் நாம் சிறிது பார்ப்போம்: அதனால் நமது மனையருகில் வளைந்த குடமுழாப் போன்ற அடியையுடைய புன்னையின் கரிய அடிமரத்தின் பின்னே சென்று மறைந்துகொள்வோம்; நீ வருவாயாக; எ - று.

பெயர்படல் - பெயர்ந்துபோதல்.

அணித்தாகவந்தமை அறிவுறுத்துவாள் தேர்மணியும் இளையரும் ஒலிப்பது கூறினள். உவகை உள்ளத்தடக்க அடங்காமையின் அல்குனலம் பாராட்டி யமைவனெனத் தலைமகள்பால் இறைமகன் உழுவலன்புடையனென அவள் ஆற்றும்படி கூறினளாயிற்று. மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - தலைவியை ஆற்றுவித்தல். (௩௦௭)

[பாலை.]

இது, நெஞ்சினாற் பொருள்வலிக்கப்பட்ட தலைமகன்
தலைமகளையெய்தி ஆற்றானாய் நெஞ்சினிற்
சொல்லிச் செலவழுங்கியது.

எ - து, பொருள்வயிற்பிரியுமாறு கருதிய தலைமகன் தலைமகள்பால் நெருங்குதலும் இவனது பிரிவின் குறிப்பறிந்த அவள்வருந்தி இவன்மீது சாய்ந்துகலங்கி வருந்துவதறிந்து இவ்வண்ணம் என்மேலழிந்துசாய்தலால் என்னுள்ளம் பிரிதலையொழித்து இவள்பால் முயங்கியுறையாநின்றது: இனிப் பொருளா லாவதென்னென்று செலவழுங்கிக் கூறுநிற்பது.

## எயினந்தைமகன் இளங்கீரனார் பாடியது.

௩௦அ. செலவிரை வுற்ற வரவம் போற்றி
மலரே ருண்கண் பனிவா வாயிழை
யாந்தற் கரையவு நாணினள் வருவோள்
வேண்டா மையின் மென்மெல வந்து

வினவலுந் தகைத்தலுஞ் செல்லா ளாகி
வெறிகமழ் துறுமுடி தயங்க நல்வினைப்
பொறியழி பாவையிற் கலங்கி நெடிதுநினைந்
தாக மடைதந் தோளே யதுகண்
டீர்மட் செய்கை நீர்படு பசுங்கலம்
பெருமழைப் பெயற்கேற் றாங்கெம்
பொருண்மலி நெஞ்சம் புணர்ந்துவந் தன்றே.

உரை:—ஆராய்ந்தணிந்த கலன்களையுடைய நமது காதலி நாம் பொருள் வயிற்பிரிந்து செல்லுதலின் விரைவாலுண்டாகிய சொல்லை விரும்பிக் கேட்டுக் குவளைமலர்போன்ற மையுண்டகண்ணில் நீரைவடியவிடுதலும் அதனை யாம் அறிந்து இஃது என்னென்று அவளைப் பலபடியாகப்பாராட்டி வினவவும் அதற்கு விடைகூற நாணினளாகி வருபவள் யாம் பிரிதலில் விருப்பமின்றி மெல்லமெல்லவந்து நீ எங்கேபோகின்றனையென்று வினவாமலும் போகலையென்று தடாமலு மிருக்குந்தன்மையளாய் மணங்கமழ்கின்ற நெருங்கிய குழல்முடியாகிய கொண்டைவிளங்க நல்ல சித்திரத்தொழிலமைந்து இயக்கும் இயந்திரமற்றழிந்த பாவையொன்று எம்மீது விழுந்தாற்போலக்,—கலங்கி நெடும்பொழுது நினைந்துநின்று பின்பு எம் உடம்பின்மீது சாய்ந்து விழுந்தனள்: அவ்வண்ணம் விழுதலும் அதனைநோக்கி ஈரிய மண்ணாற்செய்யப்பட்டு ஈரங்காயாத பசுமட்கலம் ஒன்று பெரிய மழைநீரை ஏந்தவைத்தலால் அஃது அந்நீரோடு வேறுபாடின்றிக் கரைந்தொழியுமன்றே அப்படிப் போலப் பொருள்வயிற் பிரியக்கருதிய எமது நெஞ்சம் அவளுடன் ஒன்றுபட்டுக் கரைந்து வேறுபாடின்றி அடங்கிற்றுமன்; ஆதலின் இனிப் பிரிவது தான் எவ்வண்ணமாகும்? எ - று.

இதனுள் ஆயிழை போற்றி நாணிவந்து செல்லாளாகித் தயங்கக் கலங்கி நினைந்து அடைந்தோளென வினையெச்ச அடுக்காகக்கொண்டு எழுவாய்க்கும் பயனிலைக்கும் இடையேகிடந்து பயனிலையை விசேடிக்கும் எச்சங்களுள்ளே ஒன்றனை முற்றாகக்கொண்டு திரித்துப் பாலும் இடமுங்காட்டி நிற்பச் செய்யுன் செய்தமை யறிக. தகைத்தலுஞ்செல்லாள் - ஒரு சொல்லாகக்கொள்க.

தான் அன்பின் மிகுதியாற் பாராட்டினது கண்டு நாணினமையின் அதனைக் கூறுவான்போன்று தன் அன்பைப் புலப்படுத்தினான். பாவையிற் கலங்கி ஆகமடைதந்தோளென அவளது அன்பின்மிகுதியும் அவட்குத் தானின்றியமையாமையுங் கூறினான். இருவரும் அன்பின்மேலீட்டினாற் கலந்துமகிழ்வதனினும் பொருள் சிறப்பிலதென்பான் 'பொருள்மலிநெஞ்சம் புணர்ந்துவந்தன்று' என்றான். மெய்ப்பாடு - பிறன்கட்டோன்றிய வருத்தம் பற்றியஇளிவரல். பயன் - இல்லத்தழுங்கல். (௩௦௮)

## [குறிஞ்சி.]

இது, வரைவுநீட ஆற்றாளெனக் கவன்று
தான் ஆற்றாளாகிய தோழியைத்
தலைமகள் ஆற்றுவித்தது.

எ - து, தலைவன் மணஞ்செய்துகொள்ள நீட்டித்தலானே தலைமகள் வருந்துவளேயென்று கவலைகொண்டு தோழி ஆற்றாதிருத்தலை யறிந்த தலைமகள் அவளை நெருங்கி நின்னு லெனக்குத் தீங்குவந்ததென்று அழாதேகொள்: அவனது கேண்மைநமக்குத் துன்பமுடைத்தென நீ கூறுநிற்பை: அவருடைய நட்பினியல்பை நன்றாக அறிந்துளேனாதலின் யான் பொறையோடு உறைவேனென அவள் தெளியும்படி கூறுநிற்பது.

### கபிலர் பாடியது.

௩௦௯. நெகிழ்ந்த தோளும் வாடிய வரியுந்
தளிர்வனப் பிழந்தவென் னிறனு நோக்கி
யான்செய் தன்றிவ டுயரென வன்பி
னழல் வாழி தோழி வாழைக்
கொழுமட லகவிலைத் தளிதலைக் கலாவும்
பெருமலை நாடன் கேண்மை நமக்கே
விழும மாக வறியுந ரின்றெனக்
கூறுவை மன்னோ நீயே
தேறுவன் மன்யா னவருடை நட்பே.

உரை:—தோழீ, தளர்வடைந்த தோளையும், வாட்டமுற்ற இரேகையையும், மாந்தளிரின் தன்மைபோன்ற அழகிழந்த எனது நிறத்தையும் நோக்கி 'என்னால் இவளுக்கு இத்துயர் செய்யப்பட்டது' என்றுகூறி என்பாலுள்ள அன்பின் மிகுதியினால் நீ அழாதேகொள்: நெடுங்காலம் வாழ்வாயாக: வாழையின் கொழுவிய மடலகன்ற கட்டைக்குருத்தாகிய இலையிலே தாற்றினுள்ள இனியநீர் கலந்து தங்கியிருக்கும் பெரிய மலைநாடனுடைய நட்பானது நமக்குத் துன்பமாயிருக்கவும் அதனை அறிபவரில்லையேயென்று நீ கூறுநிற்பை: ஐயோ! அவருடைய நட்பை நான் மிக நன்றாகத் தெளிந்திருக்கின்றேனாதலால் ஆற்றியிருப்பேன்காண்; எ - று.

வரி - இரேகை. கலாவும் - கலக்கும். செய்தன்று - செய்தது.

தலைமகன் பிரிந்ததனைக்கருதி ஏக்கமடைந்ததனால் தோள்நெகிழ்ச்சியும் இரேகையின் வாட்டமும் மேனியதழிவுங்கண்ட தோழி முன்பு தான் மதி

யுடம்பட்டதனிமித்தம் இப்பொழுது இவளுக்கு இத்தீங்கு நேர்ந்ததெனக் கவன்றனளாதலின் இவள் துயர் யான் செய்ததென ஆழலென்றாள். தலைவன் பிரியும்பொழுதெல்லாம் கூறிய வாய்மை பிறழாது குறித்தபருவத்து வருவதனால் அவர் நட்பை யான் தெளிவேனென்றாள். தோழி வருந்திக்கூறலின் நாடன் என ஒருமையாகவும் தலைவி தலைவனை உயர்த்திக்கூறலின் அவர் எனப்பன்மையாகவுங் கூறியதாம்.

உள்ளுறை:—வாழைமடலிலே நீர்தங்கிக் கலந்திருக்குமென்றது என்னுள்ளத்தில் எப்பொழுதும் அவர் தங்கிக் கலந்திருப்பராதலால் யான் வருந்தேனென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் தோழியையாற்றுவித்தல். (௩0௯)

[மருதம்.]

(க) இது, வாயிலாகப்புக்க விறலியைத்
தோழி சொல்லியது.

எ - து, பரத்தையிற் பிரிந்து மீண்டுவந்த தலைமகன் தலைமகளது ஊடல்தீர்ப்பான் விறலியை விடுத்தலும் அவளை நோக்கிய தோழி எங்கள் இறைவனுக்கு இன்னுமொரு பரத்தையை நாளைக்கொணர்ந்து கொடுக்க உடன்பட்டுவந்த விறலீ, நின் பயனற்ற சொல்லை அப்பரத்தையரின் தாயர்பாலுங்கூறி அவரையும் முயங்க விடுப்பாய்கொலா மென்று வெகுண்டு கூறா நிற்பது.

(உ.) விறலியை எதிர்ப்பட்ட பரத்தை
சொல்லியதுமாம்.

எ - து, வெளிப்படை. (உரை இரண்டற்குமொக்கும்.)

பரணர் பாடியது.

௩௧0. விளக்கி னன்ன சுடர்விடு தாமரைக்
களிற்றுச்செவி யன்ன பாசடை தயங்க
வுண்டுறை மகளி ரிரியக் குண்டுநீர்
வாளை பிறழு மூரற்கு நாளை
மகட்கொடை யெதிர்ந்த மடங்கெழு பெண்டே
தொலைந்த நாவி னுலைந்த குறுமொழி
யுடன்பட் டோராத் தாயரோ டொழிபுடன்
சொல்லலை கொல்லோ நீயே வல்லைக்
கன்றுபெறு வல்சிப் பாணன் கையதை

வள்ளுயிர்த் தண்ணுமை போல
வுள்யாது மில்லதோர் போர்வையஞ் சொல்லே.

உரை:—விளக்கைப்போன்ற ஒளிவிடுகின்ற மலர்பொருந்திய தாமரையினுடைய களிற்றியானையின் செவியைப்போன்ற பசிய இலை அலைபட நீர்பருகுந் துறையின்க ணிறங்கிய மாதர்க ளஞ்சியோட ஆழமாகிய நீர்மிக்க பொய்கையில் வாளைமீன் வெடிபாயும் ஊரனுக்கு இனி வருகின்ற அடுத்த நாளைக்கும் ஒரு பரத்தையைக் கொணர்ந்து கொடுத்தற்கு நேர்ந்த அறியாமையுடைய விறலியே, மெய்ம்மையே கல்லாதொழிந்த நாவினால் நிலைகுலைந்த தாழ்மையுடைய நின் சொல்லுக் குடன்பட்ட அப் பரத்தையரின் தாய்மாருடன் ஒருசாரெய்தி நீதான் விரைவாக ஆவின்கன்றையுரித்து உணவாகக்கொள்ளுகின்ற பாணன் கையிடத்ததாகிய பெரிதாக ஒலித்தலையுடைய தண்ணுமை வாச்சியம்போல உள்ளே யாதுமில்லாத ஒரு மேற் போர்வையுடைய சொற்களைச் சொல்லுகின்றிலையோ? அங்ஙனஞ்சொல்லி அவரையும் பிறர் முயங்குமாறு விடுக்கலாமன்றோ? எ - று.

தாமரை - அதன் மலருக்கு ஆகுபெயர். யாதுமில்சொல் - பயனற்ற சொல். தெளிவுபற்றி இறந்தகாலத்தாற் கூறினாள்.

பரத்தை நயக்குமாறு வேண்டும் பொய்ம்மைகூறிப் புணர்ப்பித்தலின் தொலைந்த நாவினென்றாள். பிற ரறியாவாறு மந்தணமாகச் செய்தமைத்தலிற் குறுமொழியென்றாள். இழிதகவுகருதாது முதியோரையும் புணர்க்குமியற்கையையென்பாள் தாயரொடு சொல்லலைகொ லென்றாள். நின் பயனற்றசொல் பரத்தையர்க்கும் அவரன்னையர்க்கு மேற்பதன்றி இங்குப் பயன்படாதென்பதாம்.

இறைச்சி:—வாளைமீன் தாமரைவருந்த மகளிரிரிந்தோடக் குண்டு நீரில் வெடிபாய்ந்து பிறழுமென்றது தலைமகன் யாம்வருந்தக் காமக்கிழத்தியர் இரிந்தகல விருந்தாக நீ புணர்த்திய புதியபரத்தையிடத்தே சென்று தங்காநிற்குமென்றதாம். மெய்ப்பாடு - வெகுளி. பயன் - வாயின்மறுத்தல்.

[நெய்தல்.]

இஃது, அலர் கூறப்பட்டு ஆற்றாளாகிய
தலைமகளைத் தோழி ஆற்றுவித்தது.

எ - து, அயலார் பழிச்சொல்லெடுத்தலால் அது பொறாது வருந்திய தலைமகளைத் தோழிநோக்கி நம்மூர் எல்லாவளனுமுடையது: துறையு மினிமையுடையது: நமது காதலரின் தேரொலிகேட்ட லரிதானமையின் நம்மூர்ச் சோலைக்கு அஃது ஒன்றுமே பழியுடையதா யிராநின்றது: அவர் வந்து கூடின் அதுவு மிக நல்லதாயிருக்குமென்று கூறி ஆற்றுவிப்பது.

## உலோச்சனார் பாடியது.

௩௩௧. பெயினே, விடுமா னுழையினம் வெறுப்பத் தோன்றி
யிருங்கதிர் நெல்லின் யாண ரஃதே
வறப்பின், மாநீர் முண்டகந் தாஅய்ச் சேறுபுலர்ந்
திருங்கழிச் செறுவின் வெள்ளுப்பு விளையு
மழியா மரபினம் மூதூர் நன்றே
கொழுமீன் சுடுபுகை மறுகினுண் மயங்கிச்
சிறுவீ ஞாழற் றுறையுமா ரினிதே
யொன்றே தோழிநங் கானலது பழியே
கருங்கோட்டுப் புன்னை மலரிற்று தருந்தி
யிருங்களிப் பிரச மூதவவர்
நெடுந்தே ரின்னொலி கேட்டலோ வரிதே.

உரை:—தோழீ, அழியாத மரபினையுடைய நம்மூரானது மழைபெய்தாலோ, எங்கும் உலாவாநின்ற உழையாகிய மான்கூட்டங்கள் செறியத் தோன்றப்பெற்றும் பெரிய கதிர்களையுடைய நெல்லின் புதுவருவாயினையுடையதா யிராநின்றது: அங்ஙனம் மழைபெய்யாது வறந்துவிட்டாலோ, பெரிய கழிநீரிடத்து முள்ளிச்செடியின் மலருதிர்ந்து பரந்து சேறெல்லாம் ஒருசேரக்காய்ந்து கரிய கழிச்சேற்றிடமெங்கும் வெள்ளையாகிய உப்புவிளையாநிற்கும் பெருமையுடையதா யிராநின்றது: இவையேயுமன்றிக் கொழுத்த மீன்சுடுபுகை தெருக்களினுள்ளேகலந்து சிறிய மலரையுடைய ஞாழல்மரங்கள் மிக்கதுறையும் இனியதாயிராநின்றது: இவ்வளவு வளம்வாய்ந்த நம்மூர்க்கணுள்ள கடற்கரைச் சோலை யொன்றுமே ஊரரெடுக்கும் ஒரு பழியையுடையதா யிராநின்றது: அதுதான் யாதோவெனில் கரிய கிளையையுடைய புன்னைமலரிலுள்ள தேனைப்பருகிக் களிப்பினையுடைய கரிய வண்டுகள் நன்னிமித்தமாக எதிர்வந்து ஒலியாநிற்ப நமதுகாதலராகிய அவர் வருகின்ற நெடிய தேரின்செவிக்கினிய ஓசையைக் கேட்பதுதான் அரியதா யிராநின்றது: இவ் வருமையொன் றில்லையாய்விடின் நம்மூருஞ் சோலையும் மேதக்கனவாதலொடுஅவர்வந்து நம்மைக்கூடின் அதுவும் மிக்க நல்லதாக நமக்குத் தோன்றுங்காண்; எ - று.

வெறுத்தல் - செறிதல். நன்னிமித்தம் - யாம் தேனைப்பருகி மகிழ்தல்போல நீயும் தலைவியினது நலனுகர்ந்து மகிழ்தியென்பது. தோன்ற எதிர்வந்தொலித்தல். மழைபெய்தால் மான்கள் காட்டைக்கடந்து நாட்டில்வந்தியங்குவ தியல்பு. அவை எவ்வளவினவாகத் தின்றழித்தாலும் குறைபாடின்றி விளையு மதுவென்றவாறு.

'மழையின்றி மாநிலத்தார்க் கில்லை' என்பது வினை நிலத்தார்க் கன்றி நெய்தனிலமாக்கள் பெயினும் வறப்பினும் பயன்பெறுவ ரென்பான்போலத் தலைமகன் பிரியினும் பிரியாதுறையினும் ஒருதன்மையான அன்பினன் என்று கூறினளாயிற்று. மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - தலைவியை ஆற்றுவித்தல், (நூகக)

[பாலை.]

இது, பொருள் வலித்த தலைமகன் நெஞ்சினை "
நெருங்கிச் சொல்லியது.

எ - து, பொருள்வயிற்பிரியுந் தலைமகன் தன்னெஞ்சினை நெருங்கி நெஞ்சமே, அருகில் நாம் முயங்கியுறையுங் கோடைநாளிலேயும் நடுங்கும் நமது காதலி கார்முதலாய நான்கு பருவங்களிலும் என்னபாடு படுவளோ வென்று யான் வருந்துகின்றேனென நொந்து கூறுகிறபது.

## கழார்க், கீரனெயிற்றியார் பாடியது.

நூகஉ. நோகோ யானே நோமென் னெஞ்சே
பனிப்புத லீங்கை யங்குழை வருடச்
சிறைகுவிந் திருந்த பைதல்வெண் குருகு
பார்வை வேட்டுவன் காழ்களைந் தருள
5. மாரி நின்ற மைய லற்சிர
மயர்ந்தன ளுழைய மாகவுந் தானே
யெதிர்த்த தித்தி முற்றா முலையள்
கோடைத் திங்களும் பனிப்போள்
வாடைப் பெரும்பனிக் கென்னள்கொ லெனவே.

உரை:—பொருளீட்டுமாறு யான் உடன்பட்டு நின்னொடு வந்திலே னென்று நொந்துகொள்ளுகின்ற என் நெஞ்சமே, மேலேறிப் படருந் தேமலையும் முற்றாத இளைய கொங்கையையு முடையளாகிய நமது காதலி அவளருகினின்றும் பிரியாது நாம் இருந்தேமாகவும் மயங்கினளாய்க் கோடைத் திங்களினும் நடுங்குபவள்,—குளிர்ந்த புதரினுள்ள இண்டின் அழகியகுழை முதுகைத் தடவிக்கொடுப்பத் தன் சிறகு குவிந்திருந்த வருத்தமிக்க வெளிய கொக்கைப் பார்வையாக்கி வேட்டுவன் அதன் காற்கட்டை யவிழ்த்துவிட நின்ற கார்காலத்திலும், பகலிரவென அறியாவாறு மயங்கிக் கிடத்தலையுடைய கூதிர்க்காலத்திலும், வாடைக்காற்றொடு கலந்துவீசும் பெரிய முன்பனிப்பருவத்திலும், பின்பனிப் பருவத்திலும் தமியளாயிருந்து என்னபாடு படுவளோவென்று யான் நோவாநின்றேன்: எனது நோயின் தன்மையறியாது நீ புலக்கின்றனை: ஈதொரு வியப்பிருந்தவாறு நன்று; எ - று.

அற்சிரம் - கூதிர்ப்பருவம். பனியெனப் பொதுப்படக்கூறினமையின் முன்பனி பின்பனியாகிய இருவகைப்பருவமுங்கொள்க. காழ் - பிணிப்பு. உழையம் - நெஞ்சையுளப்படுத்தியது.

உள்ளுறை:—வேட்டுவனாலே பார்வையாகக் களைந்து வைக்கப்பட்ட குருகு இண்டங்குழை வருடப் பைதலவாய் மாறிநிற்குமென்றது நம்மால் இல்லின்கண் வைகுமாறு விடப்பட்ட தலைவி வருந்தித் தோழி தேற்ற மாரிக்காலத்தைக் கழியாநிற்குமென்றதாம். மெய்ப்பாடு - பிறன்கட்டோன்றிய வருத்தம்பற்றிய இளிவரல். பயன் - இல்லத்தழுங்கல். (௩௧௨)

[குறிஞ்சி.]

இது, தோழி சிறைப்புறமாகத் தலைமகட்குச்
சொல்லுவாளாய்ப் புனம் அழிவுரைத்துச்
செறிப்பறிவுறீஇயது.

எ - து, தலைமகன் ஒருசிறைப்புறமாக வந்திருப்பதனை யறிந்த தோழி அவன் விரைவில் வரையுமாறு தலைவியைநெருங்கித் தோழீ, தினை கொய்யும்பதங் கொள்ளும்: அதனால் நாம் மீண்டு மனையகம் புகுவேம்போலத் தோன்றாநின்றது: அங்ஙனமானால் நம்முடைய தடைநீக்கிச் சென்று முன்பு நம்மைக் கைவிட்ட காதலனை எவ்வாறு அணுகிற்போமென நொந்து கூறாநிற்பது.

## தங்கால், பொன்கொல்லன் வெண்ணாகனார் பாடியது.

௩௧௩. கருங்கால் வேங்கை நாளுறு புதுப்பூப்
பொன்செய் கம்மியன் கைவினை கடுப்பத்
தகைவனப் புற்ற கண்ணழி கட்டழித்
தொலிபல் கூந்த லணிபெறப் புனைஇக்
காண்டற் காதல் கைம்மிகக் கடீஇயாற்
கியாங்கா குவங்கொ றோழி காந்தட்
கமழ்குலை யவிழ்ந்த நயவருஞ் சாரற்
கூதள நறும்பொழில் புலம்ப வூர்வயின்
மீள்குவம் போலத் தோன்றுந் தோடுபுலர்ந்
தருவியி னொலித்த லானா
கொய்பதங் கொள்ளுநாங் கூஉந் தினையே.

உரை:—தோழீ, கதிர்கொய்யும் பதங் கொள்ளாநின்ற நாம் கூவிக் கிளியோப்புந் தினைப்புனமெல்லாம் மேல் இலைகாய்ந்து மலையருவி ஒலித்

தாற்போல ஒலித்த லமையாவா யிராநின்றன: அதனால் யாம் காந்தளின் கமழ்கின்ற குலைமலர்ந்த விருப்பமிகுஞ் சாரலின்கண்ணே கூதாளிபடர்ந்து மலர்ந்த நறியசோலை தனிமையாகும்படி கைவிட்டு ஊரிடத்து மீண்டு செல் வேம்போல எனக்குத் தோன்றாநிற்கும்: இங்ஙனமாகையில் தடைமுழு தும் அழித்துக் கரிய கிளைகளையுடைய வேங்கைமரத்தில் நாட்காலையின் மலர்ந்த மிக்க புதியபூ பொன்னைப் பணிசெய்யும் பொற்கொல்லனுடைய கைவினையைப்போல மிக அழகுபொருந்திய தாழ்ந்த பலவாய கூந்தலில் அணிபெறச் சூடிக்காண்பதற்கு அளவுகடந்து விருப்பமிகுதலாலே நம்மை இப்பொழுது கைவிட்டிருக்கிற தலைவனை எவ்வாறு சென்று சேர் வோம்? எ - று.

கண்ணழிவு - தடை. கட்டழித்தல் - முற்ற ஒழித்தல். இஃது, அழி வில் கூட்டத்து அவன்புணர்வு மறுத்தல்.

கொய்பதங் கொள்ளுந் தினையென்றதனால் புனமழிவுகூறிப் பகற்குறி யியலாதென மறுத்தாள். அணிபெறப்புனைந்து காண்டற் காதல் கைம்மிக வென்றதனால் அவ னின்றியமையாமைகூறி விரைவில் வரைந்தெய்துக வென்றாள். ஊர்வயின் மீள்குவம்போலத் தோன்றுமென்றதனால் வரைந் தெய்த இயலாதாயின் இரவுக்குறியேனும் வந்தெய்துகவென்று குறிப்பித் தாள். கடஇயானென்றதனால் இங்ஙனம் அடைந்த எம்மைக் கைவிட்ட அறனிலாளனென நொந்துகூறினாள். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவு கடாதல். (௩௧௩)

[பாலை.]

இது, பிரிவிடை மெலிந்த தலைமகள் சொல்லியது.

எ - து, பிரிந்துசென்ற தலைமகன் முன்பு கூறிய பருவவரவின்கண் வாராமையால் மெலிந்த தலைமகள் நெஞ்சம்நொந்து "ஒன்றாத் தமரினும்" என்ற (தொ - பொ - ௪௦ ) சூத்திரத்தில் கூறிய 'நாளது சின்மையும், இளமையதருமையும், அன்பின தகலமும்' பிறவும் "நிகழ்ந்தது கூறி நிலை யலுந் திணையே" (தொ - பொ - ௪௪ ) என்ற விதிப்படி தானே கூறுவாளாகி முன்பு சுரத்தின்கண்ணே சென்ற காதலர் 'முதிர்ந்தோ ரிள மையெய்தார், வாழ்நாளளவறிந்தாரில்லை ஆதலின் நின் கொங்கையைப் புல் லிக் கங்குல் கழியக்கடவது' என்றுகூறி எம்மளவிலே பொய்த்தனர்: அத னால் அணங்கப்பெறாது வாழ்வாராகவென்று அழிந்துகூறாநிற்பது.

## முப்பேர் நாகனார் பாடியது.

௩௧௪. முதிர்ந்தோ ரிளமை யொழிந்து மெய்தார்
வாழ்நாள் வகையள வறிஞரு மில்லை

மாரிப் பித்திகத் தீரித ழலரி
நறுங்கா ழாரமொடு மிடைந்த மார்பிற்
குறும்பொறிக் கொண்ட கொம்மையம் புகர்ப்பிற்
கருங்கண் வெம்முலை ஞெமுங்கப் புல்லிக்
கழிவ தாக கங்கு லென்றுதா
மொழிவன் மையிற் பொய்த்தனர் வாழிய
நொடிவிடு வன்ன காய்விடு கள்ளி
யலங்கலம் பாவை யேறிப் புலம்புகொள்
புன்புறா வீழ்பெடைப் பயிரு
மென்றாழ் நீளிடைச் சென்றிசி னோரே.

உரை:—நொடித்துவிட்டாற்போன்ற காய்கள் ஒலியெழும்பத் தெறிக்கின்ற கள்ளியின் அசைகின்ற பாவைபோன்ற கிளைகளிலேறித் தனியேயிருத்தலைக்கொண்ட புல்லிய புறாவானது தான் விரும்பிய பெடையைப் புணர்ச்சிக்குறிப்பால் அழையாநிற்கும் வெயிலின் வெப்ப மாறாத நீண்டிருக்கின்ற சுரத்தின்கண்ணே சென்ற தலைவர்தாம்,—'ஆயுள் முதிர்ந்து யாக்கை மூத்துத் தளர்ந்தவர் மீண்டொருகாலத்து இளமைப்பருவத்தை விரும்பினாலும் தவறியேனும் அடைபவரல்லர்: தாம் வாழ்நாளின் வகையினளவை யறிபவருமில்லை: ஆதலால் மாரிக்காலத்து மலர்கின்ற சிறு சண்பகத்தின் கூரிய இதழ்களையுடைய மலரை நறிய வயிரமுற்றிய சந்தனத்தை யரைத்துப்பூசி மேல் மாலையாக அணிந்த மார்பிலே குறுகிய புள்ளியமைந்த இளைய அழகிய நிறத்தையுடைய கரிய கண்களமைந்த விருப்பமிகு முலைகள் நெருங்க அணைத்திருந்தபடியே கங்குல் கழியக்கடவதாக' என்று முன்புகூறிய தம் மொழியளவில் வன்னெஞ்சுடைமையாற் பொய்த்தனர்: அங்ஙனம் பொய்த்ததனால் ஓரேதமுமின்றி நீடுவாழ்வாராக; எ - று.

பித்திகம் - சிறுசண்பகம். ஞெமுங்கல் - நெருங்கல். நொடிவிடல் - நெரித்துவிடல். கள்ளியின்தலை பாவைபோன்றிருத்தலிற் பாவையென்றார். கொம்மை - இளமை.

பிரியேனென்ற சூள் வருத்துமாதலின் அச்சூள் வருத்தாவாறு வாழிய வென்றாள். செல்லுநெறி புறவு பெடையையழைத்துப் புணருவதனையுடையதாயிருப்ப அதனை நோக்கியும் மீண்டாரில்லையேயென் றிரங்கியவாறு. இதனான் முதிர்ந்தோ ரிளமையெய்தாரென்றது இளமையதருமை. வாழ்நாள் அறிஞருமில்லை யென்றது நாளது சின்மை. ஞெமுங்கப்புல்லிக் கழிவதாக வென்றது அன்பினதகலம். ஏனையவும் உய்த்துணர்க. மெய்ப்பாடு-அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (௨௧௪)

[நெய்தல்.]

இது, தலைமகனைப் பரத்தைநொந்து
சொல்லியது.

எ - து, பரத்தையிற் பிரிந்த தலைமகன் மீண்டு தலைமகள்பால் வருதலும் அவள் சினமிகுதலாலே அதனை நீக்கும் வழியின்றி நின்றபொழுது அவனது இளமைமுதிர்ந்த காமக்கிழத்தி தலைவியை வெகுளாதபடி கூறி உடன்படுத்துகின்றாள் துறைவனே, பருவஞ்சென்றபின்னன்றோ என்போல இவளும் நின்னாலே கைவிடத்தக்காளென உள்ளுறையாலும், நீ ஒழுங்காக ஆராய்ந்து குற்றம்வாராது நடவாயெனின் நின்னை விரும்பியோர் தீயிடைப்பட்ட மலர்போல்வரென வெளிப்படையாலுங் கடிந்துகூறி ஊடலைத்தீர்த்துக் கூட்டாநிற்பது.

அம்மூவனார் பாடியது.

௩௱௧௫. ஈண்டுபெருந் தெய்வத் தியாண்டுபல கழிந்தெனப்
பார்த்துறைப் புணரி யலைத்தலிற் புடைகொண்டு
மூத்துவினை போகிய முரிவா யம்பி
நல்லெருது நடைவளம் வைத்தென வுழவர்
புல்லுடைக் காவிற் றொழில்விட் டாங்கு
நறுவிரை நன்புகை கொடாஅர் சிறுவீ
ஞாழலொடு கெழீஇய புன்னையங் கொழுநிழன்
முழவுமுதற் பிணிக்குந் துறைவ நன்றும்
விழுமிதிற் கொண்ட கேண்மை நொவ்விதிற்
றவறுநற் கறியா யாயி னெம்போன்
ஞெகிழ்தோட் கலுழ்ந்த கண்ணர்
மலர்தீய்ந் தனையர் நின்னயந் தோரே.

உரை:—நெருங்கிய பெரிய தெய்வமெனப் பெயர்கொண்ட யாண்டுகள் பல சென்றதனாலே கரையையடுத்த துறையிலே கடனீர் அலைத்தலால் மோதப்பட்டு முதிர்ந்து தொழில் செய்யவுதவாது ஒழிந்த முரிந்த வாயையுடைய தோணியை,—நல்ல எருது முன்புள்ள நடையின் சிறப்பு நீங்கியதேயென்று அதனை உழவர் புல்லையுடைய தோட்டத்திலே தொழில்செய்யாதபடி விட்டொழிந்தாற்போல நறிய வாசனையுடைய நல்ல தூமங்கொடாராய்ச் சிறிய மலரையுடைய ஞாழலொடு சேர்ந்தோங்கிய புன்னையின் கொழுவிய நிழலிலே குடமுழாப்போன்ற அந்த மரத்தின் வேரடியிலே பிணித்துப்போகடுந் துறையையுடைய தலைவனே, பெரிதும் சிறப்பினதாகக் கொண்ட நட்பின்கண்ணே நுட்பமாகிய தவறும் வாராதபடி நன்றாக

அறிந்து நடக்கவேண்டும்: அதனை நீ அறியாயாயின் நின்னால் விரும்பப்படு வோர் எம்மைப்போல நெகிழ்ந்த தோளும், கலுழ்ந்த கண்ணுமுடையராய் மலர்ந்து முறையே உதிர்ந்து கழியாது மலர்ந்தவுடன் தீய்ந்தாற்போல்வர் காண்; எ - று.

பாரத்து எனவும் வளம் வாய்த்தென எனவும் பாடம்.

தெய்வம் - வருடம்; தெய்வத்தியாண்டு - இருபெயரொட்டு; அத்து - அல்வழிச்சாரியை. அம்பி - மரக்கலமுமாம். புகைகொடுத்தல் - கழுது அணங்கிக் கடலிலே கெடுக்காதிருத்தற்பொருட்டு. விழுமிது - சிறப்புடையது. நொவ்விது - நுண்ணியது.

தன்னையும் அவன் கைவிட்டுச் சேரிப்பரத்தையர் நலனுகர்ந்துறைதலின் எம்போலென்றாள்.

உள்ளுறை:—அம்பி முதிர்தலும் புன்னையின்கீழ்க் கொண்டுபோய்ப் பிணித்ததென்றது முன்பு நின்னை யடைந்த மாதர் பலருஞ் சிறிது முதிர் தலும் அவரைப் பாதுகாவாது இல்லயின் விடுத்தொழிந்தனை யென்றதாம்.

நின்னை நயந்தோர் மலர்தீய்ந்தனையரென்றது இவளும் முதிர்ந்தாலன்றோ ஏனையோரைப்போலக் கைவிடப்படுவாள், அங்ஙனமின்றி இவ்விளமையிலேயே நீ துறந்ததனால் எம்மைப்போல இவளும் மலர்முதிராது கருகிய தன்மையளாயினளென்பது. மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - ஊடல் தீர்த்தல். (௲௧௫)

[பாலை.]

இது, பிரிவிடைமெலிந்த தலைமகளைத்
தோழி வற்புறுத்தது.

எ - து, தலைவன் பிரிதலால் வருந்திய தலைவியைத் தோழி நீ வருந்தாதேகொள்: முல்லை அரும்பும்பொழுது வருவேமென்று அகன்ற காதலர் மீண்டு வருமுன் அவை அரும்பும்படி வம்பமாரி பெய்யத்தொடங்கி இடி யிடித்துவிட்டது: ஆதலால் இம்மேகம் அறியாமையுடையதென வலி யுறுத்திக் கூறுநிற்பது.

## இடைக்காடனார் பாடியது.

௲௧௬. மடவ தம்ம மணிநிற வெழிலி
மலரின் மௌவ லைம்வரக் காட்டிக்
கயலே ருண்கட் கனங்குழை யிவைநின்
னெயிறேர் பொழுதி னெய்தரு வேமெனக்
௫ கண்ணகன் விசும்பின் மதியென வுணர்ந்தநின்

னன்னுத னீவிச் சென்றோர் நந்நசை
வாய்த்துவரல் வாரா வளவை யத்தக்
கன்மிசை யடுக்கம் புதையக் கால்வீழ்த்துத்
தளிதரு தண்கார் தலைஇ
விளிவிசைத் தன்றால் வியலிடத் தானே.

உரை:—தோழீ, கேட்பாயாக; முன்பு மலரையுடைய முல்லையைச் செவ்வையாகக் காட்டிக் கயல்போன்ற மையுண்ட கண்ணையும், கனவிய குழையையுமுடையாய் இம்முல்லை நின் பற்கள்போன்ற அரும்பையீனும் பொழுதில் யாம் நின்னை யெய்துவேமென்றுகூறி இடமகன்ற ஆகாயத்தில் எழுகின்ற திங்களோவென ஐயுற்றறியும்படியாகிய நினது நல்ல நெற்றியைத் தடவிக்கொடுத்துச்சென்ற நமது காதலர் தாம் நம்மை விரும்பும் விருப்பமுடையராய் வருதலின்றி வாராது அங்கிருக்கும் இக்காலத்தில் சுரத்துநெறியையுடைய மலைமேலே அதன் பக்கமெல்லாம் மறையுமாறு காலிறங்கி நீர்த்துளியைப்பெய்யுந் தண்ணிய மேகம் அம் முல்லைகள் அரும்பும்படி மழையைப்பெய்து அகன்ற ஆகாயத்தினிடத்திலே இடியிடித்தலையுஞ் செய்யாநின்றது: ஆதலின் நீலமணிபோலும் நிறத்தையுடைய இம் மேகம் அறியாமையுடையதுகாண்: இது மிக்க வியப்பு; எ - று.

பருவமன்றென்றமையால் குறித்தபருவத்து வருவரெனவும் பொய் கூறாரெனவும் பொய்ச்சூளால் அவர் அணங்கப்பெறுவரேயென்று நீ வருந்தாதேயெனவும் வற்புறுத்தினளாயிற்று. மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - தலைவியை ஆற்றுவித்தல். (௩௧௬)

[குறிஞ்சி.]

இது, தோழி தலைமகனை வரைவு கடாயது.

எ - து, தோழி வரையாது களவின் வழிவந்தொழுகுந் தலைமகனை நெருங்கி மலைநாடனே, நீ விரும்பிய இவள்பால் வந்துபோகுங் களவினை அன்னை அறிவாளேயாயின் இவள்கண் நீர்கலந்து சிவந்து வேறுபாடெய்தி எவ்வண்ணமாக முடியுமோவென அஞ்சி யுரையாடுவோளாகி உள்ளுறையால் வரைந்துகொண்டு செல்வாயாகவெனவும் நொந்துகூறுநிற்பது.

மதுரைப், பூவண்டனாகன்வேட்டனார்
பாடியது.

௩௧௭. நீடிருஞ் சிலம்பிற் பிடியொடு புணர்ந்த
பூம்பொறி யொருத்த லேந்துகை கடுப்பத்
தோடுதலை வாங்கிய நீடுகுரற் பைந்தினை
பவளச் செவ்வாய்ப் பைங்கிளி கவரு

முயர்வரை நாடநீ நயந்தோள் கேண்மை
யன்னை யறிகுவ ளாயிற் பனிகலந்
தென்னா குவகொ றானே யெந்தை
யோங்குவரைச் சாரற் றீஞ்சுனை யாடி
யாயமொடு குற்ற குவளை
மாயிதழ் மாமலர் புரைஇய கண்ணே.

உரை:—நீண்ட கரிய மலையிலே பிடியானையொடுகலந்த பொலிவுற்ற முகத்திலே புள்ளியையுடைய களிற்றியானையின் தூக்கிய கைபோல மேலிலையகத்தினின்றும் நீண்டு வளைந்த பசிய தினைக்கதிரைப் பவளம்போலச்சிவந்த வாயையுடைய பசிய கிளிகள் கொய்துகொண்டுபோகாநிற்கும் உயர்ந்த மலைநாடனே, நீ விரும்பிய இத்தலைவியிடத்து வைத்திருக்குங் களவொழுக்கத்தாலாகிய நட்பை எமது அன்னை அறிகுவாளாயின்,—எந்தையினது உயர்ந்த மலைச்சாரலினுள்ள இனிய சுனையிலே நீராடித் தோழியரோடு சென்றுபறித்த அச்சுனைக்குவளையின் கரிய இதழ்களையுடைய சிறந்த மலரையொத்த கண்கள் நீர்கலந்து வடியப்பெற்று இனி எப்படியாகி முடியுமோ? எ - று.

வாங்கிய கதிர் - நீண்டு பறிந்த கதிருமாம். குற்ற - பறித்த. களவொழுக்கம் அன்னையறியின் ஒறுப்ப அதனாலே தலைவி அழுது இறந்துபடுமென்பது.

உள்ளுறை:—தினைக்கதிர் உண்ணுங்கிளி கொய்துகொண்டுபோகலான் அக்கிளிக்குப் பயன்படுமஃதன்றித் தான் விளைந்த கொல்லைக்குப் பயன்படாதன்றே! அவ்வாறே இவளும் நலனுகருகின்ற நினக்குப் பயன்படுவதன்றிப் பிறந்த இல்லகத்துக்கு யாதும் பயன்படுவதின்மையின் நீ வரைந்துகொண்டு செல்கவென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுகடாதல். (௩௧௭)

[பாலை.]

இது, பிரிவுணர்த்தப்பட்ட தலைமகனைத் தோழி சொல்லியது.

எ - து, களவொழுக்கத்துக்கொண்டு தலைக்கழிந்து தன்மனைவரைந்து கொண்ட தலைமகன் பொருள்வயிற் பிரிகின்றான் தோழிக்குணர்த்த அவள் ஐயனே, அன்று நாம் ஓமைநிழலிலிருக்கும்பொழுது களிற்றியானை பிளிற்றியதை வேறாகவுணர்ந்து பிடியானை புலம்பிய குரலை நினைத்தலுஞ் செய்வீரோ? அந்நெறியில் எங்ஙனஞ் செல்வீரென்பான்போன்று பிரிவினாலே தலைவிபடுந் துன்பத்தைக்குறிப்பித்து மறுத்துக் கூறாநிற்பது.

## பாலைபாடிய பெருங்கடுங்கோப் பாடியது.

௩௧௮. நினைக்கலு நினைதிரோ வைய வன்றுநாம்
பணைத்தா ளோமைப் படுசினை பயந்த
பொருந்தாப் புகர்நிழ லிருந்தன மாக
நடுக்கஞ் செய்யாது நண்ணுவழித் தோன்றி
யொடித்துமிசை கொண்ட வோங்குமருப் பியானை
பொறிபடு தடக்கை சுருக்கிப் பிறிதோ
ரறியிடை யிட்ட வளவைக்கு வேறுணர்ந்
தென்றூழ் விடரகஞ் சிலம்பப்
புன்றலை மடப்பிடி புலம்பிய குரலே.

உரை:—ஐயனே, அன்று நாம் பருத்த அடியையுடைய ஓமைமரத்தின் தாழ்ந்த கிளையிலுண்டாகிய இலைதீய்ந்தமையாலே பொருந்தாத புள்ளி பட்ட நிழலின்கண்ணே இருந்தேமாக, அப்பொழுது நம்மை நடுக்கப்படுத்தாது தான் அடையுமிடத்தில்வந்து தழையை யொடித்துத் தின்னுதல் கொண்ட உயர்ந்த தந்தத்தையுடைய யானை தன் புள்ளியையுடைய நீண்ட கையைச்சுருட்டித் தூக்கி வேறொன்றனை அறிகின்றதன் காரணமாக இடையீடுபட்டுப் பிளிற்றியவுடன் அதனை வேறாகவுணர்ந்து வெயில் பரவிய மலைப்பிளப்பிடமெல்லாம் எதிரொலி யெடுக்கும்படியாகப் புல்லிய தலையையுடைய இளைய பிடியானை புலம்பிய குரலைக்கேட்டிருந்தீரன்றே! அதனை நினைத்தலுஞ் செய்வீரோ? செய்வீராயிற் கொடிய சுரநெறியில் ஏகாதிருத்தலுடன் இவளைப்பிரியத் தக்கீருமல்லீர்; எ - று.

பனைத்தாளோமை யென்றும் பாடம்.

படுசினை - தாழ்ந்தகிளை. வேறுணர்தல் - புலியொடுபொருததோவென உணர்தல். புன்றலை - மெல்லிய தலையுமாம்.

இறைச்சி:—களிறு வேறொன்றனைக்கருதித் தாழ்த்தமையால் அதனை மாறுபாடாக வுணர்ந்து பிடியானை புலம்புமென்றது நீயிர் சென்றவிடத்துத்தாழ்ப்பின் இவள் புலம்பி இறந்துபடு மென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - செலவழுங்குவித்தல். (௩௧௮)

## [நெய்தல்.]

இது, காப்புமிகுதிக்கண் ஆற்றானாகிய தலைமகன் தலைமகளை நினைந்து தன்னுள்ளே சொல்லியது.

எ - து, களவொழுக்கம் புலப்படக்கண்டு தலைவியை இல்வயிற் செறித்துக் காவலோம்பலும் ஆங்குவந்த தலைமகன் அதனையறிந்து ஆற்றானாகித்

தலைவியை நினைந்து இத் தகைய நடுயாமத்து இவளுடைய முயக்கத்தைக் கருதி யான் துயிலுகின்றிலேன்: இனி என்னிலை யாதாய் முடியுமோ வென நொந்து கூறாநிற்பது.

## வினைத்தொழிற் சோகீரனார் பாடியது.

௩௧௯. ஓதமு மொலியோ வின்றே யூதையுந்
தாதுளர் கானற் றெளவென் றன்றே
மணன்மலி மூதூ ரகனெடுந் தெருவிற்
கூகைச் சேவல் குராலோ டேறி
யாரிருஞ் சதுக்கத் தஞ்சுவரக் குழறு
மணங்குகால் கிளரு மயங்கிரு ணடுநாட்
பாவை யன்ன பலராய் வனப்பிற்
றடமென் பணைத்தோண் மடமிகு குறுமகள்
சுணங்கணி வனமுலை முயங்க லுள்ளி
மீன்கண் டுஞ்சும் பொழுதும்
யான்கண் டுஞ்சிலன் யாதுகொ னிலையே.

உரை:—கடலும் ஒலியடங்கிவிட்டதே: ஊதைக்காற்று மகரந்தத்தைக் கிண்டுகின்ற கழிக்கரைச் சோலையும் பொலிவழிந்ததே: மணல்மிக்க இம் மூதூரின்கணுள்ள அகன்ற நெடிய தெருவிலே கூகையின் சேவல் அதன் பெண்பறவையொடு சென்று மக்களியங்காத பெரிய நாற்சந்தி கூடுமிடத்தில் யாவர்க்கும் அச்சமுண்டாகும்படி குழறாநிற்கும்: பேய்களும் வெளிப்பட்டு உலாவாநிற்கும்: ஒருவரையொருவ ரறிதற் கியலாது மயங்கிய இருண் மிக்க அத்தகைய இரவு நடுயாமத்தில் கொல்லிப்பாவைபோன்ற பலரும் ஆராயும் அழகையும், அகன்ற மெல்லிய பருத்த தோளையுமுடைய மடப்பமிக்க இளமடந்தையினது தேமல்படர்ந்த அழகிய கொங்கையை முயங்குதல்கருதி மீன்களுறங்கும் இராப்பொழுதெல்லாம் யான் கண்ணுறங்கிலேன்: ஆதலின் இனி என்னிலை எத்தன்மையதாய் முடியுமோ? அறிந்திலேன்; எ - று.

யான்கண்டுஞ்சே னெனவும் பாடம்.

ஓவின்று - ஓவிற்று; நீங்கிற்று. இரவு நடுயாமத்துக் கடலோசையடங்குதல் வழக்கு. தெளவெனல் - பொலிவழிதல். ஊதையும்என்றதன் உம்மை பிரித்துக்கூட்டப்பட்டது. மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். ()

[மருதம்.]

இது, பரத்தை தனக்குப் பாங்காயினோர் கேட்ப நெருங்கிச் சொல்லியது.

எ - து, பரத்தையிற் பிரிந்த தலைமகன் அவளைநீங்கிப் புதிய ஒருபரத்தையிடம் புகுந்ததனாலே அதனையறிந்த முதற்பரத்தை சினந்து தனக்குப் பாங்காயினோர்க்குச் சொல்லுவாள்போல இறைமகன் கேட்கும்வண்ணம் நெருங்கிநின்று திருவிழாவுமில்லாத இக்காலத்தில் இவனாலே காதலிக்கப் பட்ட இவள் தன்னைப் புனைந்துகொண்டு தெருவிலே சென்றதற்கு ஊரொருங்கு நகைசெய்ததன்றிக் குலமடமாதரும் தம் தம் கொழுநரைக் காத்துக் கொண்டனர்: அங்ஙனமாக இவனை இவள் பற்றிக்கொண்டது அரிதொன்றன்றென இகழ்ந்து கூறுநிற்பது.

கபிலர் பாடியது.

௩௨0. விழவு முழந்தன்று முழவுந் தூங்கின்
றெவன்குறித் தனள்கொ லென்றி யாயிற்
றழையணிந் தலமரு மல்குற் றெருவி
னிளையோ ளிறந்த வனைத்தற்குப் பழவிற
லோரிக் கொன்ற வொருபெருந் தெருவிற்
காரி புக்க நேரார் புலம்போற்
கல்லென் றன்றா லூரே யதற்கொண்டு
காவல் செறிய மாட்டி யாய்தொடி
யெழின்மா மேனி மகளிர்
விழுமாந் தனர்தங் கொழுநரைக் காத்தே.

உரை:—ஊரிலே செய்யப்படுந் திருவிழாவுஞ் செய்துமுடிந்தது: மத்தளமும் ஓசையொழிந்தது: இக்காலத்து இவள் யாதுகருதினளோவென்று கேட்பாயேயாயின் கருதியது கூறுநிற்பேன்: ஒருநாள் உடுக்குந் தழையை யணிந்து அத் தழையசையும் அல்குலையுடையவளாய்த் தெருவின்கண்ணே இவ்விளையோள் சென்ற அவ் வொருகாரணத்திற்காக,—பழைமையாகிய வெற்றியையுடைய கொல்லிமலைத் தலைவனாகிய வல்வில்லோரியைக் கொன்ற மலையமான் திருமுடிக்காரியென்பான் உடனே அவ் வோரியினது ஒப்பற்ற பெரிய தெருவிலே புகுந்ததைக்கண்ட காரியின் பகைவராகிய ஓரியைச்சார்ந்த யாவரும் ஒருசேரநின்று பேரிரைச்சலிட்டாற்போல இவ் வூரிலேகல்லென்னும் நகையொலி யுண்டாயிற்று: அந் நகையொலியைக் கேட்டும் இவள் நங்களுடைய கேள்வரைக் கைப்பற்றிக்கொண்டு செல்லா நிற்குமென்றெண்ணி ஆராய்ந்தணிந்த வளையையுடைய அழகிய மாந்தளிர்

போன்ற மேனியையுடைய மாதர்கள் காவல்செறியச் செய்து தம்தம் கொழுநரைப் பாதுகாத்துக்கொண்டு நன்மையடைந்தார்கள்: அங்ஙனம் அவரவர் பாதுகாத்ததனால் இவள்செயல் பயன்படாமையின் இவனைக் கைக் கொண்டகன்றனள்காண்: இவட்கு இஃதோ ரரியசெயலன்று; எ - று.

உழந்தன்று - ஒடுங்கிற்றுமாம். தூங்குதல் - அடங்குதல். விழுமாத்தல் - சிறப்படைதல்.

விழவு முதலாயின இல்லாத காலத்து இவள் வெளிவந்தமையின் ஆண்பாலாரை வயமாக்கவேண்டி யென்றாள். மாதர் பலரும் தம் தம் கொழுநரைக் காத்துக்கொண்டனரென்றதனால் காவாத இவனைக் கைப்பற் றிக்கொண்டனளென்று குறிப்பாற் கொள்ளுமாறு கூறினளாயிற்று. மெய்ப் பாடு - வெகுளி. பயன் - விருந்தின் பரத்தையைப் பழித்தல். (ஙஉ0)

[முல்லை.]

இது, வினைமுற்றி மீள்வான் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

எ - து, வினைவயிற்சென்று மீளுந்தலைமகன் தேர்ப்பாகனைநோக்கி நமது காதலி மாலைப்பொழுது [illegible]யில்லாத வறுமனையை நோக்கி வருந்தா நிற்பளோ [illegible]ரைவில் நினது தேரைச் செலுத்துவாயாக; காட்டின்கண்ணே நெருங்குதலும் எம்மூர்மரங்கள் தோன்றுநிற்பனகாணென உவந்து கூறா நிற்பது.

## மதுரை, அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் பாடியது.

ஙஉக. செந்நிலப் புறவின் புன்மயிர்ப் புருவை
பாடின் றெண்மணித் தோடுதலைப் பெயரக்
கான முல்லைக் கயவா யலரி
பார்ப்பன மகளிர் சாரற்புறத் தணியக்
கல்சுடர் சேருங் கதிர்மாய் மாலைப்
புல்லென் வறுமனை நோக்கி மெல்ல
வருந்துங் கொல்லோ திருந்திழை யரிவை
வல்லைக் கடவுமதி தேரே சென்றிக
குருந்தவிழ் குறும்பொறை பயிற்றப்
பெருங்கலி மூதூர் மரந்தோன் றும்மே.

உரை:—திருத்தமாகச் செய்த கலனணிந்த எனது காதலி சிவந்த நிலத்தையுடைய காட்டின்கண்ணே சிறியமயிரையுடைய யாடுகளின்

தெளிந்த ஓசையினிய மணிகளைக் கழுத்திலே பூட்டப்பட்ட கூட்டமெல்லாம்தாம் மேய்வதையொழித்துத் தொழுவம்புகுமாறு பெயராநிற்பக் கானத்தின்கணுள்ள முல்லையின் அகன்றவாயையுடைய மலரைச் சாரலின் புறத்துள்ள பார்ப்பனமகளிர் பறித்துச் சூடாநிற்ப ஆதித்தமண்டிலம் அத்தமனக்குன்றை அடைகின்ற ஒளிமழுங்கிய மாலைப்பொழுதில் யானில்லாமையால் புல்லென்ற வறுவிய மாளிகையைநோக்கி மெல்ல வருந்தாநிற்பளோ? பாகனே, நமதுதேரை விரைவிலே செலுத்திக்காண்: சென்று அழகிய குருந்து மலர்கின்ற காட்டின்கண்ணே நெருங்குதலும் பெரிய ஒலியையுடைய நம்மூரின் மரங்கள் தோன்றாநிற்கும்: ஆதலின் நின்தேர் விரைவிலே செல்லுவதாக; எ - று.

புருவை - யாடு. கயவாய் - அகன்றவாய். சென்றிக - செல்கவென்னும் வியங்கோள் வினைத்திரிசொல். குறும்பொறை - காடு.

மரந்தோன்றுமென்றதனால் ஊரின் அணிமைகூறினன். பார்ப்பனமகளிர் அங்கி வளர்க்குங் கேள்வரையுடைமையிற் பிரியப்பெறாராதலின் அம்மகளிர் மலரணிந்தமை கூறுமுகத்தால் அவர்போலக் காதலியும் பிரியாதுறையக் கருதுமேயென்று குறிப்பித்தான். மெய்ப்பாடு - உவகை. பயன் - கேட்டபாகன் தேர்கடாவல். (௩௨௧)

## [குறிஞ்சி.]

(க) இது, தோழி சிறைப்புறமாகச் சொல்லியது.

எ - து, தலைமகன் களவொழுக்க மேற்கொண்டு சிறைப்புறமாக வந்திருப்பதை யறிந்ததோழி அவன் கேட்டு உள்ளுறையால் விரைவிலே பொருளீட்டிவந்து வரைந்துகொள்ளுமாறு தலைவியை நெருங்கித் தோழீ நாடனது மார்பைப் பெறாமையாலாகிய வேறுபாட்டையறிந்த அன்னை முருகணங்கென்று வெறியெடுத்தலும் அங்கெய்திய வேலன் இடுகின்ற பலியால் இவ்வேறுபாடு நீங்குமாயின் இதனினுங் கொடியதொன்றில்லை கண்டாய்: அங்ஙனம் நிகழ்வது உண்மைதானோ ஒன்றுகூறுயென்று கவன்று கூறாநிற்பது.

(உ.) தலைமகள் பாங்கிக் குரைத்ததூஉமாம்.

எ - து, வெளிப்படை. (உரை இரண்டற்குமொக்கும்.)

## மதுரைப், பாலாசிரியன் சேந்தன் கொற்றனார் பாடியது.

௩௨௨. ஆங்கனந் தணிகுவ தாயின் யாங்கு
மிதனிற் கொடியது பிறிதொன் றில்லை

வாய்கொல் வாழி தோழி வேயுயர்ந்
தெறிந்துசெறித் தன்ன பிணங்கரில் விடர்முகை
யூன்றின் பிணவி னுட்குபசி களைஇய
ஈனியங் கரும்புழை யொற்றி வாள்வரிக்
கடுங்கண் வயப்புலி யொடுங்கு நாடன்
றண்கமழ் வியன்மார் புரிதினிற் பெறாது
நன்னுதற் பசந்த படர்மலி யருநோ
யணங்கென வுணரக் கூறி வேல
னின்னியங் கறங்கப் பாடிப்
பன்மலர் சிதறியர் பரவுறு பலிக்கே.

உரை:—தோழீ, வாழ்வாயாக; மூங்கில் உயர்ந்து வளரப்பெற்று இடையே வெட்டி நெருக்கிவைத்தாற்போன்ற பின்னிய புதர்களையுடைய மலைப்பிளப்பையடுத்த துறுகல்லிடத்து ஊனைத்தின்னுகின்ற பெண்புலிக் குளதாகிய அஞ்சத்தக்க பசியைப் போக்கவேண்டி மக்கள் இயங்குகின்ற நுழைதற்கரிய சிறுவழியையடுத்து வாள்போன்ற கோடுகளையும் கொடிய கண்ணையுமுடைய வலிய ஆண்புலி பதுங்கியிருக்கும் மலைநாடனது தண்ணி தாய்க் கமழ்கின்ற அகன்றமார்பை உரிமையாகப்பெறுமையா லுண்டாகிய நல்ல நுதலிலே பசப்பெய்திய நினைத்தல்மிக்க நீங்குதற்கரிய இந்நோய் முருகவேள் அணங்கியதா லுளதாயிற்றென்று அன்னை அறியும்படி சொல்லிப் படிமத்தான் (பூசாரி) தனது துடிமுதலாய வாச்சியம் ஒலிக்கப் பாடிப் பலவாயபூக்களைத் தூவித் துதித்து இவ் யாட்டினை ஏற்றுக்கொள்ளென்று அதனை யறுத்துக் கொடுக்கும் பலிக்காக அவ்வண்ணம் இந்நோய் தணிவ தாயினோ எவ்விடத்தும் இதனினுங்காட்டிற் கொடியது பிறிதொன்றில்லை கண்டாய்: அவ்வண்ணம் தணியுமென்பது மெய்ம்மைதானோ? ஆமாயிற் கூறுவாய்; எ - று.

வாய் - உண்மை. புழை - நுழைவழி. ஒற்றுதல் - அடுத்தல்.

உரிமையிற் பெறாததனாலே பசலைநோய் தோன்றியதென்பாள் வரைந்து உரிமையிற்பெறுமாறு அறிவுறுத்தினாள். நீட்டிப்பின் அன்னை வெறியெடுப்ப அதனால் இறந்துபாடெய்துமெனவும் அறிவுறுத்தினாளாயிற்று. இது, பசலை பாய்தல்.

உள்ளுறை:—பெண்புலியின் பசியைப் போக்க ஆண்புலி இரைதேடிப் பதிவிருக்குமென்றது தலைவியின் படர்மலியருநோய் போக்கி வரைந்தெய்துமாறு தலைமகன் விரைவிலே பொருளீட்டச்சென்று பெற்றுவருவானாக வென்றதாம். மெய்ப்பாடு - மருட்கையைச் சார்ந்த பெருமிதம். பயன் - வரைவுகடாதல். (கூஉஉ)

[நெய்தல்.]

இது, தோழி இரவுக்குறிநேர்ந்தது.

எ - து, பகற்குறி இடையீடெய்திய தலைமகன் இரவுக்குறி விரும்பினனாக, அதுகேட்டு உடன்பட்டதோழி குறியிடங்கூறுகின்றாள்:—எமது சிறுகுடிப்பாக்கம் பனையின்கூட்டத்தின் நடுவணது: வண்டொலிமிகுதியால் நின்தேரொலி கேட்டலுமரிது: வருநெறியுமீதே யாதலால் மறவாது வருவாயாகவென இயைந்து கூறாநிற்பது.

வடமவண்ணக்கன் பேரிசாத்தனார்
பாடியது.

௩௨௩. ஓங்கித் தோன்றுந் தீங்கட் பெண்ணை
நடுவ ணதுவே தெய்ய மடவர
லாயமும் யானு மறியா தவண
மாய நட்பின் மாணல மொழிந்துநின்
கிளைமை கொண்ட வளையார் முன்கை
நல்லோ ளந்தை சிறுகுடிப் பாக்கம்
புலிவரி யெக்கர்ப் புன்னை யுதிர்த்த
மலிதா தூதுந் தேனொ டொன்றி
வண்டிமி ரின்னிசை கறங்கத் திண்டேர்த்
தெரிமணி கேட்டலு மரிதே
வருமா றீதவண் மறவா தீமே.

உரை:—நின்பால் மயக்கமுற்ற நட்பினால் மாட்சிமையுடைய இனிய நலத்தையும் ஒழியவிட்டு நின்னுடைய உறவைக்கொண்ட வளையணிந்த முன்னங்கையையுடைய நல்ல நின்காதலிக்குத் தந்தையின் சிறுகுடியை யுடைய பாக்கமானது உயர்ந்து தோன்றுகின்ற இனிய கள்வடிதலையுடைய பனைகளி னடுவிலுள்ளதா யிராநின்றதுகண்டாய்: மடப்பம் வருதலையுடைய தோழியர்கூட்டமும் யானும் ஒருவரையொருவர் அறியாதபடி அவ்விடத்தி லேயே யிருப்போம்: ஆங்கே புலியின் வரிபோன்ற மணல்மிக்க திடரி லிருக்கும் புன்னையினின் றுதிர்ந்த நிரம்பிய பராகத்தை யுண்ணுகின்ற பெண்வண்டுகளுடனே ஆண்வண்டுகளும் முரலுகின்ற இனிய ஓசை மிக் கொலித்தலால் நினது திண்ணிய தேரின் விளங்கிய மணிகள் ஒலித்தலைப் பிறர்கேட்டலும் அரியதாகும்: அங்கு நீ வருதற்குரிய நெறியும் இதுவே யாகும்: ஆதலினாற் சேர்ப்பனே, மறவாது வந்துகூடுவாயாக; எ - று.

கிளைமை - உறவு. தேன் - ஒருவகைவண்டுமாம். ஊதல் - உண்ணுதல்.

நீ வருமுன் யாம் அங்கேசென்று நின் வருகையை எதிர்கொள்வே மென்பாள் அவணமென்றாள். நீ வருவதனை அயலார் அறியாத இடமென் பாள் பெண்ணை நடுவணதென்றாள். இதனாற் குறியிடமும் அங்கென்றே கூறினாளென்பது. அஞ்சாது வரலாமென்பாள் மணியோசை பிறர்கேட்ப தரிதாகுமென்றாள். தீங்கட்பெண்ணையென்றதனால் நீயங்குத்தங்கி விருந் துண்டு செல்லலாமென உலகியல் கூறினாளுமாம்.

இறைச்சி:—புன்னையுதிர்த்த தாதினை வண்டுகள் இமிர்ந்து உண்ணு மென்றதனால் தலைவியினலத்தை யஞ்சாதுண்டு மகிழ்ந்திருக்கலா மென்பது. மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - இரவுக்குறி நேர்தல். (நஉந)

[குறிஞ்சி.]

(க) இது, தலைமகன் பாங்கற்குச் சொல்லியது.

எ - து, பாங்கற்கூட்டத்துப் பாங்கன் தலைவனைநெருங்கி நீ கூறுகின்ற மங்கை எவ்விடத்து எவ்வடிவினளென்றானுக்கு அவள் தன் தந்தையினது இல்வயி னிராநின்றனள்: அன்னை யுணவூட்ட வந்துழி அவளை யலையப் படுத்தித் தான் ஓடியுலாவு மிளம்பருவத்தினளென இயலிடங் கூறாநிற்பது.

[பாலை.]

(உ.) இடைச்சுரத்துக் கண்டோர்

சொல்லியதூஉமாம்.

எ - து, கொண்டுதலைக்கழிய இடைச்சுரத்துக் கண்டோர் காலினாற் பந்து உருட்டுபவள்போல வெயிலிலே நடந்துசெல்லமாட்டாது ஓடாநிற்கும்: இவளையீன்ற தாய் என்னென்று வருந்துங்கொலோவென்று இரங்கிக் கூறா நிற்பதுமாம். (உரை இரண்டற்குமொக்கும்.)

கயமனார் பாடியது.

நஉச. அந்தோ தானே யளிய டாயே
நொந்தழி யவலமொ டென்னா குவள்கொல்
பொன்போன் மேனித் தன்மக ணயந்தோள்
கோடுமுற் றியானை காடுட னிறைதர
நெய்பட் டன்ன நோன்கா ழெஃகின்
செல்வத் தந்தை யிடனுடை வரைப்பி
னாடுபந் துருட்டுநள் போல வோடி
யஞ்சி லோதி யிவளுறும்
பஞ்சி மெல்லடி நடைபயிற் றும்மே.

உரை:—பொன்போலுகின்ற மேனியையுடைய தன் புதல்வியாகிய இவளுடைய விருப்பத்தின்படி நடத்துபவளாதலால் இவளை ஈன்றதாய் யாவராலும் இரங்கத்தக்காள்: அவள்தான் நொந்து அழிகின்ற அவலமுடனே இனி எவ்வண்ணமாகுவளோ? ஐயோ! தந்தங்கள் முற்றிய யானை தனது காட்டில் நிறையப் பெருகியதால் அத்தகைய செல்வமுடைய நெய் பூசினாலொத்த வலிய காம்புசெருகிய வேற்படையேந்திய தந்தையினது அகற்சியையுடைய இடத்தில் விளையாடுகின்ற பந்தைக் காலால் உருட்டு பவள்போல ஓடியோடி அழகிய சிலவாகிய கூந்தலையுடைய இவளுடைய மிக்க பஞ்சுபோன்ற மெல்லிய அடிகள் நடைபயிற்றாநிற்குமே; எ - று.

சாணையா லாகிய மெருகு நெய்பூசினாலொத்தலின் நெய்பட்டன்ன எஃகு என்றார். இனி நெய்பூசிய அத்தகைய வேலெனவுமாம். மெய்ப்பாடு - உவகை. பயன் - பாங்கற்குணர்த்தல்.

இரண்டாந்துறைக்கு பொன்போன்ற மேனி வாடுமென்று வருந்துவளாதலின் என்னாகுவளோவென்றார். செல்வத்தந்தையின்புதல்வி இங்ஙனம் ஓடுமேயென்றிரங்கி அந்தோவென்றார். பரலில் நடைபயிற்றுமே பஞ்சி மெல்லடியன்றேயென் றிரங்கினாரென்பது. மெய்ப்பாடு - அழுகை. பயன் - ஆற்றாதுரைத்தல். (௩௨௪)

[பாலை.]

இது, தோழி செலவழுங்குவித்தது.

எ - து, தலைமகன் பொருள்வயிற் பிரிகின்றானைத் தோழி நெருங்கி எம்பெருமானே, பிரிகின்றனை யென்பதறிந்த இவள்கண் நீர்வடியக்கண்டும் கொடியகாட்டில் நீ செல்லுதல் தகுதியாமோ? நுஞ் செலவு தவிர்க வென அவன் செலவழுங்கும்வண்ணங் கூறாநிற்பது.

மதுரைக், காருலவியங் கூத்தனார்
பாடியது.

௩௨௫. கவிதலை யெண்கின் பருஉமயி ரேற்றை
யிரைதேர் வேட்கையி னிரவிற் போகி
நீடுசெயற் சிதலைத் தோடுபுனைந் தெடுத்த
வாவாழ் புற்ற மொழிய வொய்யென
௫ முரவாய் வள்ளுகி ரிடப்ப வாங்கு
மூக்கரும் கவலை நீந்தி மற்றிவள்
பூப்போ லுண்கண் புதுநலஞ் சிதைய
வீங்குநீர் வாரக் கண்டுந்
தகுமோ பெரும தவிர்கநுஞ் செலவே.

உரை:—பெரும, இவளுடைய நீலமலர்போல்கின்ற மையுண்ட கண்களின் புதிய அழகு சிதையும்படி மிக்க நீர்வடிதலைக் கண்டுவைத்தும்,—கவிந்த தலையையும் பருத்த மயிரையுமுடைய ஆண்கரடி தான் இரைதேடியுண்ணும் விருப்பத்தினால் இரவிலேசென்று நீடிய செய்கையையுடைய கறையான்கூட்டம் செய்துயர்த்திய பாம்புகள் வாழ்கின்ற புற்றிலுள்ள அச்சிதலை யொருங்கே யொழியும்படி விரைவாக ஒடிந்த வாயையுடைய பெரிய நகங்களாலே பறித்து உள்ளிருக்கும் குரும்பிமுதலாயவற்றை உறிஞ்சியிழுக்காநின்ற உள்ளத்தால் நினைத்தற்குமரிய கவர்த்த சுரநெறியிலே செல்லத்தகுமோ? ஆதலால் நீ செல்லுவதை ஒழிப்பாயாக; எ - று.

சிதலைத்தோடு - கறையான்கூட்டம். முரவு - ஒடிதல்; முரவாய் - ஒடிந்தவாய். நீந்தி என்பதை நீந்தவெனத்திரிக்க. குழாத்தொடுஞ் செல்லுதலால் நுஞ்செலவெனப் பன்மையாற்கூறினாள்.

இறைச்சி:—கரடி இரைதேர்வேட்கையாலே புற்றைப்பெயர்த்து இரவிலுண்ணுமென்றது இவளது காமம் நின்னைக்கூடும் வேட்கை மீதூர்தலானே இவளுயிரை யுண்டொழிக்கு மென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - செலவழுங்குவித்தல். (௩௨௫)

[குறிஞ்சி.]

இது, தோழி தலைமகனை வரைவு கடாயது.

எ - து, பலகாலுங் களவுமேற்கொண்டு வந்தொழுகுந் தலைமகனைத் தோழி நெருங்கி நாடனே நீ எந்நாளும் வந்து முயங்கியகன்றும் இன்னதனாலுண்டாயதென் றறியவியலாதபடி இவள் கண்கள் பசப்பூராநிற்கும்: அதனை நின்பால் உரைசெய்யவும் வெள்குவேன்: இவள் இவ்வாறு துன்புறாதபடி மணந்து ஓம்புவாயாகவென்று சூழ்ந்து கூறாநிற்பது.

மதுரை, மருதனிளநாகனார் பாடியது.

௩௨௬. கொழுஞ்சுளைப் பலவின் பயங்கெழு கவாஅற்
செழுங்கோள் வாங்கிய மாச்சினைக் கொக்கின்
மீன்குடை நாற்றந் தாங்கல்செல் லாது
துய்த்தலை மந்தி தும்மு நாட
நினக்கு முரைத்த லொல்லா விவட்கே
நுண்கொடிப் பீரத்தி னூழுறு பூவெனப்
பசலை யூரு மன்னோ பன்னா
ளறியமர் வனப்பினெங் கான நண்ணி

வுண்டெனு முணரா வாகி
10 மலரென மரீஇ வரூஉமிவள் கண்ணே.

உரை:—கொழுத்த சுளையையுடைய பலாவின் பயன்மிக்க மலைப்பக்கத்தில் செழுமையாகிய காய்காய்த்துப் பருத்தலாலே தாங்கமாட்டாது வளைந்த கரிய கிளையிலேவந்து தங்கிய கொக்கானது மீனைக்கொணர்ந்து குடைந்து தின்னுதலா லுண்டாகிய புலவுநாற்றம் பொறுக்கவியலாது ஆங்குள்ள பஞ்சுபோன்ற தலையையுடைய மந்தி தும்மாநிற்கும் மலைநாடனே, பலநாளும் அறியப்படுகின்ற அமர்ந்த அழகுடைய எமது தினைப்புனத்தை நீ அடைதலுண்டெனினும் இன்னகாரணத்தாலே தோன்றினவென்று நம்மா லுணரப்படாதனவாகி நீலமலர்போலப் பொருந்திவரு மிவளுடைய கண்ணில்,—நுண்ணிய கொடிப்பீர்க்கின் மலர்ந்த பிற்றைநாளுதிரும் பழம்பூவி னிறம்போலப் பசலை யுண்டாகாநிற்கும்: அதனை நினக்குச்சொல்லவும் யான் வெட்கமுடையவளா யிராநின்றேன்: இவட்கு இத்தகைய துன்பம் வாராதபடி காப்பாயாக; எ - று.

ஊழுறுபூ - மலர்ந்துகழியும் பழம்பூ. உண்டெனும் - உண்டெனினும் என்பதன் இடைக்குறை.

காமக்குறிப்பு நிகழ்ந்தவழிப் படுவதோ ருள்ளவொடுக்கத்தாற் கூற நாணுவலென்றாள்.

உள்ளுறை:—பலாமரம் தினைப்புனமாகவும், கொக்குத் தலைவனாகவும், மீன் தலைவியாகவும், குடைதல் இன்பந்துய்த்தலாகவும், நாற்றம் அலராகவும், மந்தி அன்னையாகவுங்கொண்டு பலாமரத்தின்மீது கொக்கிருந்து மீனைத் தின்னுதலானாகிய நாற்றத்தைத்தாங்கமாட்டாது மந்தி தும்முதல் போலத் தினைப்புனத்து நீ வந்து இவளைக்கலந்து செல்லுதலா லுண்டாகிய அலரைத் தாங்கமாட்டாது அன்னை சினந்து பலகாலும் நோக்காநிற்கு மென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுகடாதல். (நஉசு)

[நெய்தல்.]

இது, வரையாது நெடுங்காலம் வந்தொழுக
ஆற்றாளாய தலைமகள் வன்பொறை
எதிரழிந்தது.

எ - து, தலைவன் மணந்துகொள்ளாது களவிலே நெடுங்காலம் வந்தொழுகுதலால் வருந்திய தலைமகளைத் தோழி ஆற்றவும் அதுபொறாது தோழியைநோக்கி நமது காதலரை நாம் விரும்புவது பழியெனில் அதனினுஞ் சாதலினியதேயாகும்: அது கூடாதாயின் அவர்மார்பை உரிமையுடையோமாத லினிதேயாகும்: இவ்விரண்டனு ளொன்றனை யடைவது நன்மையாமென அழிந்து கூறாநிற்பது.

## அம்மூவனார் பாடியது.

௩௨௭. நாடல் சான்றோர் நம்புதல் பழியெனிற்
பாடில கலுழுங் கண்ணொடு சாஅய்ச்
சாதலு மினிதே காதலந் தோழி
யந்நிலை யல்ல வாயினுஞ் சான்றோர்
கடனிலை குன்றலு மிலரென் றுடனமர்ந்
துலகங் கூறுவ துண்டெனெ நிலைஇய
தாய மாகலு முரித்தே போதவிழ்
புன்னை யோங்கிய கானற்
றண்ணந் துறைவன் சாயன் மார்பே.

உரை:—என்பால் அன்புமிக்க தோழீ, நம்மைவிரும்பிக் களவொழுக் கத்தில் வந்து முயங்குஞ் சான்றோராகிய தலைவரை நாம் விரும்பியொழுகு தல் பழியுடையதாமெனில் தூங்காதனவாய் அழுகின்ற கண்ணோடு ஏக்கத் தால் இளைத்து இறந்துபோதலு மினியதாகும்: அவ்வாறு இறப்பது இயல் புடையதன்றாயினும் சால்புடையவர் தாம் செய்யுங் கடமையிலே குறைபடா ரென்று சேரப்பொருந்தி உலகங் கூறுவதுண்டெனக்கொண்டு அரும்புகள் மலர்கின்ற புன்னைமரமோங்கிய சோலையையுடைய தண்ணிய துறைவாது மெத்தென்ற மார்பை நிலையாகப்பெறத்தக்க தன்மையுடையேமானாலும் அஃது உரியதேயாகும்; இவ்விரண்டனு ளொன்றை யடைவது நலமாகு மன்றோ? எ - று.

சான்றோர் - இரண்டனுருபு விரிக்க. தாயம் - பாகம்; உரிமை. துறை வன் - பன்மையொருமை மயக்கம்.

உலகங்கூறுதலால் உண்டெனக்கொள்வதன்றி இயல்பாகிய உறுதி அவனிடத்தே தனக்கில்லையாதலின் முதலில் இறப்பதே நலமென்றாள். இறந்துசெய்யக்கடவது யாதுமில்லையாதலின் ஒருகால் உண்டெனக் கொண்டு உரிமையாக்கினும் அமையுமென்று பின்னர்க்கூறினாள்.

இறைச்சி:—அடைந்தாரைக் கைவிட்ட துறைவனது சோலையாயிருந் தும் புன்னை போது அவிழாநின்றதே இஃதென்னவியப்போ வெனப் பொருட்புறத்தே தோன்றியதறிக. மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயா வுயிர்த்தல். (௩௨௭)

### [குறிஞ்சி.]

### இது, தோழி வரைவிடை யாற்றாளாகிய தலைமகளை வற்புறுத்தது.

எ - து, மணஞ்செய்துகொள்வதாக மொழிந்து சென்ற தலைமகன் குறித்தபருவத்து வாராமையால் அது பொறாது வருந்திய தலைமகளைத்

தோழி நெருங்கி மலைநாடன் உயர்பிறப்பினனென்பதை யறிந்தனம்: அவன் கூறிய மொழி பிறழான்காண்: முதன்மழை பெய்தவுடன் வருவேனென்றன னாதலின் ஒருநாள் நம்மூரின் புனத்தில் மழைபெய்வதாக, பெய்த அன்றே வருவன் என வலியுறுத்துக் கூறுநிற்பது.

## தொல்கபிலர் பாடியது.

௩௨௮. கிழங்குகீழ் வீழ்ந்து தேன்மேற் றூங்கிச்
சிற்சில வித்திப் பற்பல விளைந்து
தினைகிளி கடியும் பெருங்கன் னாடன்
பிறப்போ ரன்மை யறிந்தன மதனால்
துவினி வாழி தோழி யொருநாட்
சிறுபல் கருவித் தாகி வலனேர்பு
பெரும்பெய றலைக புனனே யினியே
யெண்பிழி நெய்யொடு வெண்கிழி வேண்டாது
சாந்துதலைக் கொண்ட வோங்குபெருஞ் சாரல்
விலங்குமலை யடுக்கத் தானுங்
கலம்பெறு விறலி யாடுமிவ் வூரே.

உரை:—தோழீ, கிழங்குகள் கீழிறங்கித் தேனடைகள் மிகுதியாக மேலேவைக்கப்பட்டு மிகச் சிலவாய தினைகளைவிதைத்து அவை மிகப்பல வாக விளைதலும் அவற்றைக் கிளி கொய்துபோகாதபடி ஓப்பிப் பாதுகாக்கும் பெரிய மலைநாடனுடைய பிறப்பு மிக உயர்வுடையதேயன்றி நம்மோடொத்த ஒருதன்மையதன்றென்பதை யறிந்தனம்: அதனால் அப்பிறப்பு இனி என்றும் வாழ்வதாக: அத்தகைய உயர்பிறப்பினனாதலின் அவன்கூறியது பிறழான்காண்: முதன்மழை பெய்தவுடன் வருவேனென்றன னாதலின், இனி எள்ளைப் பிழிந்தெடுக்கும் நெய்யையும் வெளிய கிழியையும் விரும்பிப்பெறாது சந்தனமரம் மிகுதியாகவுடைய உயர்ந்த பெரிய சாரலிலே குறுக்கிட்ட மலையின்புறத்திருக்கும் பக்கமலையிடத்து நன்கலம்பெற்ற விறலி கூத்தயராநிற்கும் இவ்வூரிலுள்ள நம்முடைய தினைப்புனத்தில் அந்த மேகம் சிறிய பலவாய மின்னல்முதலாய தொகுதியையுடையதாகி வலமாக எழுந்து பெரும்பெயலை ஒருநாள் பொழிந்துவிடுவதாக, பெய்த அன்றே வருகுவனாதலின் நீ வருந்தாதேகொள்; எ - று.

விழுதல் - இறங்குதல்; "வள்ளிகீழ்வீழா" என்றார், (௩௯) கலியினும். தூங்குதல் - தொங்குதல். விளைந்து என்பதை விளையவெனத்திரிக்க. ஓரன்மை - ஒருதன்மையல்லாமை. எண் - எள்ளு.

உள்ளுறைகள்:—(௧) கிழங்கு கீழ்வீழ்ந்து தேன் மேற்றூங்கி யென்றது அவன் நம்பால்வைத்த அன்பு கீழாகவேரூன்றி யிறங்கி மேலே காணும் போதெல்லாம் தேனினும் இனிமைசெய்கின்றதென்பது.

,, (௨) சிற்சிலவித்திப் பற்பலவிளைந்தென்றது ஒரோவொருகால் இயற்கைப்புணர்ச்சியிலே நீ இன்பம்நல்க அதனைப் பெற்றானாதலின் அதற்கீடாகப் பல்லாயிரம் நன்மையை நினக்களிக்க நாடியிருப்பனென்பது.

,, (௩) கிளிகடியுமென்றது அவ்வன்பு கெடாதபடி பாதுகாக்குமென்பது.

,, (௪) எண்ணெய் கிழி வேண்டாது விறலி ஆடுமென்றது அவன் பெருந்தகைமைநோக்கவே அருங்கல முதலாயின வேண்டாது நமது சுற்றத்தார் நின்னைக் கொடுக்க உடன்படுவரென்பது. மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - தலைவியை ஆற்றுவித்தல். (௧௨அ)

[பாலை.]

இது, பிரிவிடை மெலிந்த தலைமகளைத் தோழி
பருவங் காட்டி வற்புறுத்தது.

எ - து, தலைமகன் வினைவயிற் பிரிதலால் மெலிவடைந்த தலைமகள் வருந்தலும் அதுகண்ட தோழி நெருங்கிக் காதலர் நம்மையகன்று சென்றாராயினும் சென்றவிடத்தே தங்கியுறைபவரல்லர்: வருவேமென்று அவர் கூறிய கார்காலம் இன்றுதான் தொடங்குகின்றதாதலின் இன்னே வருகுவர்காண்: அதுகாறும் நீ வருந்ாதேகொள்ளென்று வலியுறுத்திக் கூறாநிற்பது.

மதுரை, மருதங்கிழார் மகனார்
சொகுத்தனார் பாடியது.

௧௨௯. வரையா நயவினர் நிரையம் பேணார்
கொன்றாற் றுறந்த மாக்களி னடிபிணி
னிடுமுடை மருங்கிற் றொடுமிடம் பெறாஅது
புனிற்று நிரை கதித்த பொறிய முதுபா
றிறகுபுடைத் திற்ற பறைப்புன் றாவி
செங்கணைச் செறித்த வன்க ணாடவ
ராடுகொ ணெஞ்சமொ டதர்பார்த் தல்கு
மத்த மிறந்தன ராயினு நத்துறந்
தல்கலர் வாழி தோழி யுதுக்கா
ணிருவிசும் பதிர மின்னிக்
கருவி மாமழை கடன்முகந் தனவே.

உரை:—தோழீ, வாழ்வாயாக; அளவுபடாத நயமுடையாராய் நிரையம் போன்ற தீய நெறியைக் கைக்கொள்ளாதொழுகும் நமது காதலர்,—சுரத்திலே கொன்றுபோகடப்பட்ட மக்களினுடைய கொலையுண்ட பிணங்களினுள்ள நிறைந்த தீநாற்றத்தையுடைய அவற்றினருகிலே சென்று பறித்துத் தின்ன இயலாது ஈன்ற அணிமையால் நெருங்காது வெறுத்துக் கடந்து போயிருந்த புள்ளிகளையுடைய முதிய பருந்து தன் சிறகை யடித்துக்கொள்ளுதலா லுதிர்ந்த பறத்தலையுடைய புல்லிய இறகைச் சிவந்த அம்பிலேகட்டிய வீரத்தன்மையுடைய மறவர் தாம் வெற்றிகொள்ளுங் கருத்துடனே நெறியைப் பார்த்து உறைகின்ற மலைவழியிலே சென்றனராயினும் நம்மைக் கைவிட்டு அங்கே தங்குபவரல்லர்: அவர் கார்காலத்து வருவேமென்றுராதலின் உவ்விடத்தே பாராய்: கரிய ஆகாயம் அதிரும்படி இடித்து மின்னி இடிமின்னல் முதலாய தொகுதியையுடைய கரியமேகம் கடனீரை முகந்துவந்தன: அவர் இன்னே வருகுவர்போலும்; எ - று.

புடைத்திட்ட எனவும் பாடம்.

நம்பால் அளவுபடாத அன்புடையராதலின் நினக்கு வருவேமென்று பொய்ச்சூளுரைத்து அதுகாரணமாகப் பின்னரெய்தும் நிரையங்கொள்பவரல்லரென்றாள்.

இறைச்சி:—(௧) ஈன்றபருந்து மக்களிறந்த பிணத்தின் முடைநாற்ற மிகுதியால் அருகிலே நெருங்கித் தின்னமாட்டாது அகன்றுபோ யிருக்குமென்றது நினது நெற்றியிலே தோன்றும் பசலை அவர் நின்பால் வைத்திருக்குங் காதன்மிகுதியால் குறித்தநாளிலே வருதல் மெய்ம்மையாதலின் அதுகண்டு தானே யகன்றொழியு மென்றதாம்.

(௨) கணைசெறித்த ஆடவர் வெல்லும் நெஞ்சத்துடன் நெறிநோக்கித் தங்காநிற்பரென்றது கொடுமையுடைய அயல் மாதர் பலரும் நின்னை யலர்தூற்றுங் கருத்தோடு அற்றம்நோக்கி யிருப்பவராதலின் நின் மெய்யின் வேறுபா டறிந்தா லிகழ்ந்து அலர் தூற்றாநிற்ப ரென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - தலைவியை ஆற்றுவித்தல். (௩௨௧)

[மருதம்.]

இது, தோழி தலைமகனை வாயின்மறுத்தது.

எ - து, பரத்தையிற்பிரிந்து மீண்டுவந்து தலைவியின் ஊடலைத்தணிக்கும்படி தோழியை வாயில்வேண்ட அவள் தலைவனைநோக்கி ஊரனே, நீ பரத்தையரை எம் மனையின்கண்ணே கொண்டுவந்து வதுவையயர்ந்து தழுவி யிருந்தாலும் அவரது மனத்தின்கண் உண்மை யரிதாதலையும் அவர் கற்புடைமகளிரா யெம்மோடொத்த லரிதாதலையும் நீ அறிந்தாயல்லைபோலுமென்று கூறித் தலைவனியல்பையும் உள்ளுறையாலே கடிந்து கூறாநிற்பது.

## ஆலங்குடி, வங்கனூர் பாடியது.

௩௩௦. தடமருப் பெருமைப் பிறழ்சுவ லிரும்போத்து
மடநடை நாரைப் பல்லின மிரிய
நெடுநீர்த் தண்கயந் துடுமெனப் பாய்ந்து
நாட்டொழில் வருத்தம் வீடச் சேட்சினை
5 யிருள்புனை மருதி னின்னிழல் வதியும்
யாண ரூரநின் மாணிழை மகளிரை
யெம்மனைத் தந்துநீ தழீஇயினு மவர்தம்
புன்மனத் துண்மையோ வரிதே யவரும்
பைந்தொடி மகளிரொடு சிறுவர்ப் பயந்து
10 நன்றி சான்ற கற்போ
டெம்பா டாத லதனினு மரிதே.

உரை:—வளைந்த கொம்பையும் வலிமைபெற்று விளங்கிய பிடரியையு முடைய கரிய எருமைக்கடா இளநடையையுடைய பலவாகிய நாரையின் கூட்டமெல்லாம் இரிந்தோடும்படியாக நெடிய நீர்நிரம்பிய தண்ணென்ற பொய்கையிலே துடுமென்னும் ஒலியுண்டாம்படி தான் காலையிலுழுத தொழிலின் வருத்தம் நீங்குமாறு பாய்ந்துகிடந்து தன்னுடம்பின் அயா நீங்கியபின்னர் நீண்ட கிளைகளையுடைய இருள்நிரம்பிய மருதமரத்தின் இனிய நிழலின்கண்ணே தங்கியிருக்கும் புதுவருவாயினையுடைய வூரனே, நின்னுடைய மாட்சிமைபொருந்திய கலனணிந்த பரத்தைமகளிரை எமது மனையின்கண் அழைத்துவந்து நீ குலமகளிரைப்போலக் கருதி மணந்து தழுவியிருந்தாலும் அவருடைய புல்லிய மனத்திலே கரவில்லாதபடி மெய்ம்மை தோன்றுதல் அரிதேயாகும்: அவரும் பசியவளையணிந்த புதல்வியரையும் புதல்வரையும் ஈன்று நன்மையமைந்த கற்புடனே எம்பக்கத் தமர்தலும் அதனினுங்காட்டில் அரியதொன்றாகும்: அங்ஙனமாதலை நீ அறிந்தாயல்லைபோலும்; எ - று.

பரத்தைமகளிரை இல்வயிற்கொணர்ந்து வதுவையயர்ந்து துய்த்தல் வழக்கு: "பிறழு மொருத்தியை யெம்மனைத் தந்து, வதுவை யயர்ந்தனை" என்றார் (௪௬) அகத்தினும். பொருள்கவரவேண்டிப் பொய்ம்மையாகிய அன்புகாட்டுவாராதலின் அவர்மனத் துண்மையரிதென்றாள். அவர் பெறும் புதல்வியரும் புதல்வரும் நமதுகுலத்துக்குச் சிறிதளவும் பயனெய்தாரென்பாள் மகளிரொடு சிறுவரையீன்று எம்பாடாதலரிதென்றாள்.

உள்ளுறை:—எருமைக்கடா தலைவனாகவும், நாரையினம் காமக்கிழத்தியராகவும், கயம் பரத்தையர் சேரியாகவும், மருதநிழல் அன்று பாணன் தூதுபோய்க் கூட்டுவித்த புதியபரத்தையின் மனையாகவுங் கொண்டு எருமைக்

